Registered No. M. 2330

"SIDDHANTHAM"
Vol. 35—No. 12



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 35 | சுபகிருது மார்கழி 1962 டிசம்பர் | இதழ் 12

உள்ளுறை



பத்திராசிரியர்: அ. சோமசுந்தரம் செட்டியார், எம்.ஏ.,

உதவிப் பத்திராசிரியர்: மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

ஆண்டுச் சந்தா ரூபா 3

தனிப்பிரதி அணு 4

## சமாஜப் பொதுக்கூட்டம்

சென்னை, மயிலாப்பூர், கீழ மாடவீதியிலுள்ள சமாஜ அலுவலகத்தில், 24—12—62 திங்கட்கிழமை காலை 9½ மணிக்குச் சமாஜ ஆண்டு அறிக்கையையும் இவ்வாண்டு வரவு செலவுக் கணக்குகளையும் ஆமோதிக்க சமாஜப் பொதுக்கூட்டம் நடைபெறும். அக்கூட்டத்திற்கு அங்கத்தினர் நிறைவெண் (Quorum) இல்லாவிட்டால் மேற்படி விஷயங்களை ஆமோதிக்க மேற்படி இடத்திலேயே மறுநாள் 25—12—62 செவ்வாய் காலை அதே நேரத்தில் சமாஜ விதிகளின்படி, வருபவர்களைக் கொண்டு அக்கூட்டம் நடத்தப்பெறும். —செயலாளர்.

## சந்தா நேயர்களுக்கு வேண்டுகோள்

சமாஜ உறுப்பினர்கள் தங்கள் சந்தாத் தொகை ரூபாய் மூன்றை டிசம்பர் மாதம் 31—12—62-க்குள் அனுப்பிவைக்க வேண்டுகின்றோம். வி. பி. பி.யில் ஜனவரி மாத இதழை அனுப்புவதாயின், 75 புதுக்காசுகள் வீணாக அதிகம்செலுத்த வேண்டியிருக்கும். மணியார்டர் மூலம் சந்தா அனுப்புவோர்: 1. தங்கள் முழுப்பெயர் 2. சந்தா எண் 3. தெளிவான முழு விலாசம் ஆகியவற்றைக் குறித்தனுப்புதல் வேண்டும்.

மலாய் நாட்டில் உள்ள சமாஜ அன்பர்கள் தங்கள் சந்தாத் தொகையைத் திரு. கே. இராமநாதன் செட்டியார், B. A., B. L., அவர்களிடத்தேனும், திரு. சிவநேயன் அவர்களிடத்தேனும் செலுத்திவிடலாம்.

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி:

செயலாளர்: சைவ சித்தாந்த மகாசமாஜம்,
12, கீழ மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

---

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜம்
# 57-வது ஆண்டு நிறைவு விழா

இராயப்பேட்டை, சென்னை.

இடம்: திரு. வி. க. மணிமண்டபம்
நாட்கள்: 30, 31—12—62; 1—1—63

" ஞாலம் நின்புக ழேமிக வேண்டும்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே "

பேரன்புடையீர் !

நிகழும் சுபகிருது ஆண்டு, மார்கழித் திங்கள் 15-ஆம் நாள் (30—12—62) ஞாயிற்றுக்கிழமை தொடங்கி மூன்று நாட்கள் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 57-வது ஆண்டு நிறைவு விழாவும், சைவர் மாநாடும். சைவ மங்கையர், சைவ இளைஞர் மாநாடுகளும், சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்தஜன சபையின் குகானந்த நிலையத்திலுள்ள திரு. வி. க. மணிமண்டபத்தின்கண் (எண் 3, மோபரீஸ் சாலை) பிற்காணும் நிகழ்ச்சி முறைப்படி நடைபெறும்.

இந்து சமய அறநிலையப் பாதுகாப்புத்துறை ஆணையாளர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார், B A.. B.L., அவர்கள் மாநாட்டைத் திறந்து வைக்க இசைந்துள்ளார்கள்.

இராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார், B.A., அவர்கள் சைவர் மாநாட்டிற்கும், வித்துவான் திரு. மீனாட்சி சுந்தர சிவை அவர்கள் சைவமங்கையர் மாநாட்டிற்கும், திரு. தி. சே. பழநிவேலு அவர்கள் சைவ இளைஞர் மாநாட்டிற்கும் தலைமை தாங்கிச் சிறப்பிப்பார்கள்.

தாங்கள் தங்கள் சபையினரோடும் பிற அன்பர்களோடும் மூன்று நாட்களும் வந்திருந்து மாநாடுகளைச் சிறப்பிக்குமாறு வேண்டுகிறோம்.

இங்ஙனம் :

G. முத்துசாமி பிள்ளை, M.A., I.A.S. (Retd.)
தலைவர்,　　　　　　　　　　செயலாளர்,

# நிகழ்ச்சி நிரல்

சுபகிருது மார்கழி 15-ஆம் நாள் (30—12—62)
ஞாயிற்றுக்கிழமை

சைவர் மாநாடு

காலை 8 மணி இராயப்பேட்டை ஸ்ரீ சுந்தரேசுவரர் கோயிலில் இறைவழிபாடு-மாநாட்டுத் தலைவர்களை ஊர்வலமாக அழைத்து வருதல்.

9—12-30 வரவேற்புரை :

திரு. G. முத்துசாமி பிள்ளை, M.A., I. A. S. (Retd.) சமாஜத் தலைவர்

ஏற்றுயர் கொடி ஏற்றம் :

திரு. K. E. அருணசலம், M.A., B. com. மானேஜர், தாராபூர் கம்பெனி. உதவி ஷெரீப், சென்னை.

திறப்புரை :

திரு. M. S. சாரங்கபாணி முதலியார் அவர்கள் B.A., B.L., இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையாளர்.

ஆண்டறிக்கை படித்தல் :

தலைமைப் பேருரைகள்:

மாலை 4—00 சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, B.A., L.T. அவர்கள் திருவுருவப் படத் திறப்பு–

தர்ம ரக்ஷாமணி திரு. K. பாலசுப்பிரமணிய ஐயர் அவர்கள் B.A., B.L., M.L.C.

6—00 டாக்டர் வ. ஆ. தேவசேனபதி அவர்கள் M.A. Ph.D. தத்துவத்துறைப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம் "சிவஞான சித்தியார்"

'செஞ்சொற் சைவர்' வித்துவான் திரு. பா. சொக்கலிங்கம் அவர்கள், கோவை, "அடிமைத் திறம்"

## மார்கழி 16-ஆம் நாள் (31—12—62) திங்கட்கிழமை

காலை 9—12-00 சைவ மங்கையர் மாநாடு

மாலை 5—8-00 சொற்பொழிவுகள் :

1. திரு. தி. கு. கி. நாராயணசாமி நாயுடு, சமாஜப் பேரன்பர், கடலூர். "சமாஜத்தின் சென்றகால-எதிர்காலப் பணிகள்"
2. திரு.க. வச்சிரவேல் முதலியார் B.A.L.T. தலைமையாசிரியர், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி, காஞ்சிபுரம். "சிவஞான போதம்"
3. திரு. மு. அருணாசலம், M.A., தலைவர், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், தஞ்சை. "திருக்களிற்றுப் படியார்"

## மார்கழி 17ஆம் நாள் (1—1—63) செவ்வாய்க்கிழமை

காலை 9—12-00 சைவ இளைஞர் மாநாடு.

மாலை 3—4-00 சமாஜ உறுப்பினர்கள் பொதுக்கூட்டம், சமாஜ அலுவலர் தேர்தல், சமாஜத் தீர்மானங்கள்.

மாலை 4—8-30 "திருமுறைக் காவலர்" திரு. அ. சோமசுந்தரம் செட்டியார், M.A. அவர்கள் திருவுருவப் படத் திறப்பு–

திரு. K. கமலக்கண்ண முதலியார் அவர்கள் M.L.C.

சொற்பொழிவுகள் :

1. குமாரி இராசமாணிக்கம் M.A, தமிழ் விரிவுரையாளர், மேரி அரசியார் கல்லூரி, சென்னை. "திருமுறைகள்"
2. திரு. புலவர் ந. ரா. முருகவேள், M.A. M.O.L., ஆசிரியர்: "திருக்கோயில்" அறநிலைய ஆட்சித்துறை, சென்னை, "சிவப்பிரகாசம்"

3. திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கள் M.A.M. Litt., தமிழ்ப் பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை.
'' தாயுமானவர் ''

8—9-00 ஆசியுரை

ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், தலைவர், தருமை ஆதீன சமயப் பிரசார நிலையம், தியாகராயநகர். சென்னை–17.

நன்றியுரை

கடவுள் வாழ்த்து.

---

குறிப்பு :—நமது நாட்டின் வடகிழக்கு எல்லையில் நேர்ந்துள்ள நெருக்கடியான நிலைமை கருதிச் சமாஜ ஆண்டு விழாவை மிகவும் சுருங்கிய அளவிலேயே நடத்துதற்குச் சமாஜம் தீர்மானித்துள்ளபடியால், சமாஜ விழாவின்போது வழக்கம் போல உணவு வசதி ஏதும் செய்யப் பெருமல் நிறுத்தி வைக்கப் பெற்றுள்ளது. வெளியூர் அங்கத்தினர்களுக்கு இடவசதி மட்டும் செய்து தரப்பெறும்; இடவசதி வேண்டுவோர் சமாஜச் செயலாளர்க்குத் தம் வருகையைக் கடிதமூலம் முன்னதாகத் தெரிவித்துக் கொள்ளுதல் வேண்டும்.

சமாஜச் சார்பில் தேசப் பாதுகாப்புக்காக நிதியுதவத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. அதற்கு அன்பர்கள் இயன்ற அளவு பொருளுதவி செய்ய வேண்டுகிறோம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜம்
# 57-வது ஆண்டு நிறைவு விழா

இராயப்பேட்டை, சென்னை.

இடம்: திரு. வி. க. மணிமண்டபம்

நாட்கள்: 30, 31—12—62; 1—1—63

" ஞாலம் நின்புக ழேமிக வேண்டும்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே "

பேரன்புடையீர்!

நிகழும் சுபகிருது ஆண்டு, மார்கழித் திங்கள் 15-ஆம் நாள் (30—12—62) ஞாயிற்றுக்கிழமை தொடங்கி மூன்று நாட்கள் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 57-வது ஆண்டு நிறைவு விழாவும், சைவர் மாநாடும், சைவ மங்கையர், சைவ இளைஞர் மாநாடுகளும், சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்தஜன சபையின் குகானந்த நிலையத்திலுள்ள திரு. வி. க. மணிமண்டபத்தின்கண் (எண் 3, மோபரீஸ் சாலை) பிற்காணும் நிகழ்ச்சி முறைப்படி நடைபெறும்.

இந்து சமய அறநிலையப் பாதுகாப்புத்துறை ஆணையாளர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார், B.A., B.L., அவர்கள் மாநாட்டைத் திறந்து வைக்க இசைந்துள்ளார்கள்.

இராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார், B.A., அவர்கள் சைவர் மாநாட்டிற்கும், வித்துவான் திரு. மீனாட்சி சுந்தர சிவை அவர்கள் சைவமங்கையர் மாநாட்டிற்கும், திரு. தி. சே. பழநிவேலு அவர்கள் சைவ இளைஞர் மாநாட்டிற்கும் தலைமை தாங்கிச் சிறப்பிப்பார்கள்.

தாங்கள் தங்கள் சபையினரோடும் பிற அன்பர்களோடும் மூன்று நாட்களும் வந்திருந்து மாநாடுகளைச் சிறப்பிக்குமாறு வேண்டுகிறோம்.

இங்ஙனம்:

G. முத்துசாமி பிள்ளை, M.A., I.A.S. (Retd.)
தலைவர்,

செயலாளர்,

# நிகழ்ச்சி நிரல்

சுபகிருது மார்கழி 15-ஆம் நாள் (30—12—62)

ஞாயிற்றுக்கிழமை

சைவர் மாநாடு

காலை 8 மணி இராயப்பேட்டை ஸ்ரீ சுந்தரேசுவரர்-கோயிலில் இறைவழிபாடு-மாநாட்டுத் தலைவர்களை ஊர்வலமாக அழைத்து வருதல்.

9—12-30 வரவேற்புரை :

திரு. G. முத்துசாமி பிள்ளை, M.A., I.A.S. (Retd.) சமாஜத் தலைவர்

ஏற்றுயர் கொடி ஏற்றம் :

திரு. K. E. அருணாசலம், M.A., B. com. மானேஜர், தாராபூர் கம்பெனி. உதவி ஷெரீப், சென்னை.

திறப்புரை :

திரு. M. S. சாரங்கபாணி முதலியார் அவர்கள் B.A., B.L., இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையாளர்.

ஆண்டறிக்கை படித்தல் :

தலைமைப் பேருரைகள்:

மாலை 4—00 சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, B.A., L.T. அவர்கள் திருவுருவப் படத் திறப்பு—

தர்ம ரக்ஷாமணி திரு. K. பாலசுப்பிரமணிய ஐயர் அவர்கள் B.A., B.L., M.L.C.

6—00 டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி அவர்கள் M.A. Ph.D. தத்துவத்துறைப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம் " சிவஞான சித்தியார் "

'செஞ்சொற் சைவர்' வித்துவான் திரு. பா. சொக்கலிங்கம் அவர்கள், கோவை, " அடிமைத் திறம் "

## மார்கழி 16-ஆம் நாள் (31—12—62) திங்கட்கிழமை

காலை 9—12-00 சைவ மங்கையர் மாநாடு

மாலை 5—8-00 சொற்பொழிவுகள் :

1. திரு. தி. கு. கி. நாராயணசாமி நாயுடு, சமாஜப் பேரன்பர், கடலூர். " சமாஜத்தின் சென்றகால-எதிர்காலப் பணிகள்"
2. திரு.க. வச்சிரவேல் முதலியார் B.A.L.T. தலைமையாசிரியர், பச்சையப்பன் உயர் நிலைப்பள்ளி, காஞ்சிபுரம். " சிவஞான போதம் "
3. திரு. மு. அருணாசலம், M.A., தலைவர், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், தஞ்சை. "திருக்களிற்றுப் படியார்"

## மார்கழி 17ஆம் நாள் (1—1—63) செவ்வாய்க்கிழமை

காலை 9—12-00 சைவ இளைஞர் மாநாடு.

மாலை 3—4-00 சமாஜ உறுப்பினர்கள் பொதுக்கூட்டம், சமாஜ அலுவலர் தேர்தல், சமாஜத் தீர்மானங்கள்.

மாலை 4—8-30 "திருமுறைக் காவலர்" திரு. அ. சோமசுந்தரம் செட்டியார், M.A. அவர்கள் திருவுருவப் படத் திறப்பு—

திரு. K. கமலக்கண்ண முதலியார் அவர்கள் M.L.C.

சொற்பொழிவுகள் :

1. குமாரி இராசமாணிக்கம் M.A , தமிழ் விரிவுரையாளர், மேரி அரசியார் கல்லூரி, சென்னை. " திருமுறைகள் "
2. திரு. புலவர் ந. ரா. முருகவேள், M.A. M.O.L., ஆசிரியர்: " திருக்கோயில் " அறநிலைய ஆட்சித்துறை, சென்னை, " சிவப்பிரகாசம் "

3. திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கள் M.A.M. Litt., தமிழ்ப் பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை.
" தாயுமானவர் "

8—9-00 ஆசியுரை

ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், தலைவர், தருமை ஆதீன சமயப் பிரசார நிலையம், தியாகராயநகர். சென்னை—17.

நன்றியுரை

கடவுள் வாழ்த்து.

---

குறிப்பு :—நமது நாட்டின் வடகிழக்கு எல்லையில் நேர்ந்துள்ள நெருக்கடியான நிலைமை கருதிச் சமாஜ ஆண்டு விழாவை மிகவும் சுருங்கிய அளவிலேயே நடத்துதற்குச் சமாஜம் தீர்மானித்துள்ளபடியால், சமாஜ விழாவின்போது வழக்கம் போல உணவு வசதி ஏதும் செய்யப் பெருமல் நிறுத்தி வைக்கப் பெற்றுள்ளது. வெளியூர் அங்கத்தினர்களுக்கு இடவசதி மட்டும் செய்து தரப்பெறும்; இடவசதி வேண்டுவோர் சமாஜச் செயலாளர்க்குத் தம் வருகையைக் கடிதமூலம் முன்னதாகத் தெரிவித்துக் கொள்ளுதல் வேண்டும்.

சமாஜச் சார்பில் தேசப் பாதுகாப்புக்காக நிதியுதவத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. அதற்கு அன்பர்கள் இயன்ற அளவு பொருளுதவி செய்ய வேண்டுகிறேம்.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 35 | சுபகிருது மார்கழி 1962 டிசம்பர் | இதழ் 12

## கடவுள் வழிபாடும் கடமையுணர்வும்

(திரு. அ. சோ.)

நமது இந்திய தேசம் காந்தியடிகள் போன்ற அரும்பெரும் தலைவர்கள் பலப்பலர் செய்த அரும்பெருந் தியாகங்களாலும், அளப்பரும் முயற்சிகளாலும் அரிதிற் பெற்ற பெறலரும் சுதந்திரத்திற்கு, இதுபோது சீன அரக்கர்களால் இடையூறு பெரிதும் ஏற்பட்டுள்ளது. சீனர்கள் நமது வடஎல்லைப் பிரதேசத்தில், லடாக் நேபா என்னும் பகுதிகளைக் கொண்ட பல்லாயிரம் சதுரமைல் அளவு நிலப்பரப்பை வஞ்சகமாகக் கவர்ந்து கொள்ள முனைந்து முயன்று வருகின்றனர். அதனுல் இன்று நம் நாட்டு மக்களிடையே மிக்க கொதிப்பும் கொந்தளிப்பும் ஏற்பட்டுள்ளன.

சீனுவுக்கும் இந்தியாவுக்கும் இடையே நிகழத் தொடங்கியுள்ள வடஎல்லைப் போர் விரைவில் முடிவுருமல், நீடித்துப் பல ஆண்டுகள் தொடர்ந்து நிகழக்கூடும் என்று, பெருமதிப்பிற்கும் பேரன்பிற்கும் உரிய நமது பிரதமர் ஜவஹர்லால் நேரு அவர்கள், நமக்கு எச்சரிக்கை செய்திருக்கின்ருர்கள்.

எங்கோ மிகத் தொலைவில் நடைபெற்ற இரண்டாவது உலகப் பெரும்போர் முடிவடைந்து, பல ஆண்டுகள் ஆகியும் அதன் விளைவுகள் இன்னும் தீர்ந்தபாடு இல்லாமல், நாம் இதுபோதும் எவ்வளவோ இடர்ப்பட்டுக் கொண்டிருக்கின்ருேம். இந்நிலையில் நம் நாட்டிலேயே போர் ஏற்பட்டு, அது தானும் இன்னும் பல ஆண்டுகள் தொடர்ந்து நீடித்து நிகழ நேருமாயின், அதன் விளைவுகளாய இன்னல்கள் எவ்வாறு இருக்கும் என ஒரு சிறிது நினைத்துப் பார்ப்பினும், நெஞ்சம் துணுக்குறும்! எனவே, இன்று நம் நாட்டின்பால் நமக்குள்ள பலவகைப் பொறுப்புக்களையும் கடமைகளையும் நன்கினிது உணர்ந்து செயலாற்றத் துணிவுகொள்ள வேண்டியவர்களாக நாம் இருக்கின்ருேம்.

நாட்டுப்பற்று ஒவ்வொரு மனிதனுக்கும் இன்றியமையா தது. "பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானினும் நனி சிறந்தனவே" என்பது யாவரும் உடன்படத் தக்கதோர் உண்மையுரை.

"தான்பிறந்த நாட்டின்கண் தனிச்சிறந்த பற்றில்லான்
ஏன்பிறந்தான் வீண்கொடியன் எனும்இழிவே
எய்துகிற்பான்."

"இஃது என்னுடைய நாடு! யான் பிறந்த இனிய நாடு! என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டு பெருமிதம் எய்தி மகிழாத மனிதன் ஒருவனும், உலகத்தில் உயிர்ப்பு விட்டுக் கொண்டு உளனே? உளனாயின், அவன் ஓர் உணர்ச்சியற்ற நடைப்பிணமேயாவான். எவனுடைய நெஞ்சத்தில் நாட்டுப் பற்று ஒளிவீசித் திகழவில்லையோ, அத்தகைய கயவன் ஒருவன் மூச்சுவிட்டுக் கொண்டு நிலக்குப்பொறையாய்-உப் பிற்கும் காடிக்கும் கூற்றாய் இருப்பானாயின், அவனை நன்கு குறித்து வைத்துக் கொண்டு எச்சரிக்கையாக இருங்கள். அவன் எத்துணை உயர்ந்த பட்டம் பதவி செல்வம் செல் வாக்கு எல்லாம் உடையவனாக இருப்பினும், அவனை ஒரு வரும் பொருட்படுத்தார். தன்னலம் ஒன்றேயுடைய அக் கொடியவன், தான் உயிரோடிருக்கும் போதே தனக்குரிய சிறப்பை இழந்து அவமதிப்புறுவான். இறக்க நேருங்கால், புகழுடல் பூதவுடல் என்ற இரண்டுமே இன்றி, புழுதியினின்று தோன்றிய அவன் அப்புழுதிக்கே திரும்பிச் சென்று புதைந்து மறைந்தொழிவான். அவனைக் குறித்து எவரும் ஒரு சிறிதும் இரக்கப்பட மாட்டார்கள். அவனை எல்லோரும் இகழ்ந்து வெறுத்து மறக்க முற்படுவர்." எனவே, மனிதராகப் பிறக்கும் பேறு பெற்ற ஒவ்வொருவருக்கும் தேசபக்தி மிகமிக இன்றி யமையாதது. தேசபக்தியைப் போலவே தெய்வபக்தியும் பெரிதும் இன்றியமையாத முதன்மை வாய்ந்தது.*

---

*" Breathes there the man, with soul so dead,
Who never to himself hath said,
This is my own, my native land!
Whose heart hath never within him burned,
As home his footsteps he had turned,
From wandering on a foreign strand!
If such there breathe, go, mark him well;
For him no Minstrel raptures swell;
High though his titles, proud his name,
Boundless his wealth as wish can claim;
Despite those titles, power, and pelf,
The wretch, concentred all in self,
Living, shall forfeit fair renown,
And, doubly dying, shall go down
To the vile dust, from whence he sprung,
Unwept, unhonoured, and unsung". —SCOTT.

இந் நெருக்கடியான நேரத்தில் நாம் எல்லோரும் தேச பக்தியிற் சிறந்தவர்களாகத் திகழ்தல் வேண்டும். சீனர்களை வெருட்டியடித்துத் துரத்த ஒல்லும் வகைகளால் எல்லாம் அரசாங்கத்திற்கு உதவி புரிய வேண்டுவது, நமக்குத் தலையாய கடமை. தேசத்தின் பொருட்டு எல்லா வகையான தியாகங்களையும் செய்தற்கு நம்மை நாமே சமைவுபடுத்திக் கொள்ளுதல் வேண்டும். நமக்குள் கட்டுப்பாடும் ஒற்றுமை மையும் பொறுப்புணர்ச்சியும் இதுபோது மிகமிகத் தேவை. அரசாங்கத்தின் பணபலம் படைபலம் ஆகியவற்றைப் பெருக்க நாம் ஆந்தனையும் முயலக் கடமைப் பட்டுள்ளோம். நம் அன்றாடத் தேவைகளைக் குறைத்துக் கொண்டு சிக்கன வாழ்வு நடத்தத் தலைப்படுதல் நாட்டுக்கு நலம் விளைக்கும். நாட்டின் நெருக்கடி தீரும் வரையில் வெற்றுர வாரங்களிலும் களியாட்டங்களிலும் நம்முடைய பொழுதும் பொருளும் ஆற்றலும் சிதறி வீணுகப் போய்விடாமல், நாம் விழிப்பாக இருத்தல் சிறப்பு.

நம் தாய்நாட்டின் பாதுகாப்புக்கும் வெற்றிக்கும் இன்றியமையாத உணவு உடை முதலிய பல்வேறு முக்கியப் பொருள்களின் உற்பத்திக்காக ஒவ்வொருவரும் தத்தம் துறைகளில் ஓயாது உழைக்கும் கடப்பாடு உடையர். யாரும் கோழைகளாக இல்லாமல் வீரஉணர்ச்சியும் தேசாபிமானமும் மிக்கவர்களாக விளங்குதல் அவசியம். பொருள்களின் பற்ருக்குறை, பொருள்களின் விலையேற்றம், கள்ள வாணிபம் போன்ற சமுதாய விரோதமான செயல்கள் யாண்டும் நிகழாதவாறு விழிப்பாக இருந்து பார்த்துக் கொள்ளுதல், அனைவர்க்கும் உரிய பொறுப்பாகும். படைப்பயிற்சி, முதலுதவிப் பயிற்சி போன்ற பலதிறப் பயிற்சிகளைப் பெறப் பலரும் முற்படுதல் முதன்மையானது...

இனி இவைகளேயன்றி, நம்நாடு விரைவில் பகைவர்களை வெற்றி பெற்று வீறுடன் விளங்குதல் குறித்துக் கடவுளை இடைவிடாது வழிபட்டுப் பிரார்த்தனை புரிந்து வருதலும், நமக்குரிய கடமைகளுள் ஒன்ருகும்.

இன்று மனித சமுதாயம் முழுவதற்கும் நேர்ந்துள்ள தீங்குகளுக்கெல்லாம் காரணம், பொதுவாகச் சமயவுணர்வும் கடவுள் வழிபாடும் குன்றி வருதலேயாகும். இன்று உலக நாடுகளெல்லாம் 'சமயம் வேறு. அரசியல் வேறு. இரண்டிற்கும் சம்பந்தம் இல்லை' என்ற நிலையில்தான் பெரும்பாலும் இயங்கிக் கொண்டிருக்கின்றன. அதனுல் விரல்விட்டு எண்ணத்தக்க ஒருசில தலைவர்களின் உள்ளச் சுழற்சிகளை

(Whims and fancies) ஒட்டி, உலகத்தின் தலைவிதியே ஒரு கணப் பொழுதில் நிர்ணயிக்கப்பட்டு விடக்கூடிய பயங்கர நிலைமை ஏற்பட்டுள்ளது. சமய உணர்வும் கடவுள் நினைவும் இல்லாத காரணத்தால்தான் சீன அரக்கர்கள் வாயளவில் நம்மோடு "பஞ்சசீலம்" பற்றிப் பேசிக்கொண்டே, வஞ்சகம் பலவும் தயங்காதும் அஞ்சாதும் செய்யத் தலைப்பட்டு விட்டார்கள். கடவுள் உணர்ச்சியுடையவர்கள் ஓரளவேனும் பழிபாவங்களுக்கு அஞ்சிக் கட்டுப்பட்டு நடப்பார்கள் என்பது திண்ணம்.

இக்கருத்துப் பற்றியே, ஏறத்தாழ 2500 ஆண்டுகளுக்கு முன் கிரேக்க நாட்டில் வாழ்ந்திருந்த "சாக்கிரடீசர்" (கி. மு. 479-399) என்னும் பேரறிஞர், "அரசர்கள் மெய்யுணர்வாளர்கள் ஆதல்வேண்டும்; அல்லது மெய்யுணர்வாளர்கள் அரசாட்சியை நடாத்துதல் வேண்டும். மெய்யுணர்வு கைவந்தவர்கள் அரசோச்சும் நிலை ஏற்பட்டாலன்றி இவ்வுலகத்திற்கும் மனித சமுதாயத்திற்கும் உய்தியில்லை" என வலியுறுத்தித் தெளிவுறக் கூறிச் சென்றுர்.*

காந்தியடிகள் சமயவுணர்வும் கடவுள் வழிபாடும் உடையவராக விளங்கியே, நம் நாட்டுக்குச் சுதந்திரம் பெற்றுத் தந்தார். தேசபக்தி தெய்வபக்தி என்னும் இரண்டும் அவருக்குப் பேச்சும் மூச்சுமாக இருந்தமையினை, யாவரும் இனிதுணர்வர். தெய்வபக்தி இல்லாத தேசபக்தி சிறப்புடையதன்று. தெய்வபக்தி இல்லாதவர்க்குத் தேசபக்தியும் இருத்தல் இயலாது என்று துணிந்து சொல்லலாம். இதனை,

"ஈசனுக்கு அன்பில்லார் அடியவர்க்கன் பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பில்லார்
பேசுவதென் அறிவில்லாப் பிணங்களை நாம் இணங்கிற்
பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ"

என அருள்நந்தி சிவம் ஓராற்ருற் குறிப்பிட்டு அருளிச் செய்திருத்தல் காணலாம்.

---

* "Until philosophers are kings, or the kings and princes of this world have the spirit and power of philosophy, and political greatness and wisdom meet in one, and those commoner natures who pursue either to the exclusion of the other are compelled to stand aside, cities will never have rest from their evils—no, nor the human race, as I believe—and then only will this our state have a possibility of life and behold the life of day" —SOCRATES, IN PLATO'S REPUBLIC.

"தெருளாதான் மெய்ப்பொருள்கண் டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்"

என ஆசிரியர் திருவள்ளுவர் பெருமானும், இக்கருத்தினையே வலியுறுத்தியிருத்தல் கருதி யுணர்தற்குரியது. 'அான்றன் பாதம் மறந்துசெய் அறங்கள் எல்லாம் வீண் செயல்' என்றதும் உணர்க.

இவ்வுண்மைகளை யெல்லாம் உணர்ந்து, சமயவுணர்வும் கடவுள் நினைவும் உடையவர்களாக நாம் வாழத் தலைப்படு தல் நலம் பயக்கும். இப்போது ஏற்பட்டுள்ள சீனப்போரில் வெற்றி பெறுவதற்கு மட்டுமேயன்றி, எப்போதுமே-மனித சமுதாயத்திற்கே – உண்மைச் சமயவுணர்வும் கடவுள் வழி பாடும் பெருநலம் விளைக்கும் என்பது திண்ணம்.

'பிரார்த்தனையும் ஜெபமும் கடவுள் பக்தியும் நம்மைக் கோழைகளாக்கி விடும். இவையெல்லாம் பயனற்ற வீண் செயல்கள்' எனக் கூறுவோரும் கருதுவோரும் மிகப்பலர் இந்நாளில் உளர். அது தவறு. உண்மைச் சமயவுணர்வும் கடவுள் நினைவும் மனிதனை ஒருபோதும் கோழையாக்க மாட்டா. மற்று அதற்கு மாறாக, அவைகள் ஒரு கோழையை யுங் கூட ஒப்புயர்வற்ற வீரனாக்கும்.

'ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே
பாரம் ஈசன் பணிஅலது ஒன்றிலார்
ஈர அன்பினர் யாதும் குறைவிலார்
வீரம் என்னால் விளம்பும் தகையதோ'

"தூரத்தே திருக்கூட்டம் பலமுறையால் தொழுதன்பு
சேரத்தாழ்ந் தெழுந்தருகு சென்றெய்தி, நின்றழியா
வீரத்தார் எல்லார்க்கும் தனித்தனிவே றடியேனென்று
ஆர்வத்தால் திருத்தொண்டத் தொகைப்பதிகம்
அருள்செய்தார்"

எனச் சேக்கிழார் பெருமான் அருளிச் செய்திருத்தல், ஈண்டுச் சிந்தித்து உணர்தற்குரியது அடியார்களின் சிறந்த பண்பு களையெல்லாம் "வீரம்" என்றும், அடியார்களை "நின்றழியா வீரத்தார்" என்றும் அவர் வியந்து பாராட்டி மொழிந்திருத்தல், நம்மனோர் நினைவில் இருத்தத் தக்கது.

பெரிய புராணத்தின்கட் போதரும் கலிப்பகையார் கோட் புலியார் எறிபத்தர் ஏனாதிநாதர் விறன்மிண்டர் சிறுத்தொண்டர்

நின்றசீர் நெடுமாறர் முதலியவர்கள் சிறந்த வீரர்களாகத் திகழ்ந்திருந்தமை இவ்வுண்மையை வலியுறுத்தும். இராசராச சோழன், இராசேந்திர சோழன், குலோத்துங்க சோழன் முதலிய தமிழ்வேந்தர்கள் சமயவுணர்விற் றலைசிறந்து விளங்கி, ஒப்புயர்வற்ற போர்த்திறனும் ஆட்சித்திறனும் மிக்க பெருவீரர்களாகப் பிறங்கினர் அல்லரோ?

"பக்தியி னாலே—இந்தப்
 பாரினில் எய்திடும் மேன்மைகள் கேளீர்!
சித்தம் தெளியும்—இங்குச்
 செய்கை யனைத்திலும் செம்மை பிறந்திடும்.
வித்தைகள் சேரும்—நல்ல
 வீரர் உறவு கிடைக்கும். மனத்திடைத்
தத்துவம் உண்டாம்—நெஞ்சிற்
 சஞ்சலம் நீங்கி உறுதி விளங்கும்...
கல்வி வளரும்—பல
 காரியம் கையுறும். வீரியம் ஓங்கிடும்.
அல்லல் ஒழியும்—நல்ல
 ஆண்மை யுண்டாம். அறிவு தெளிந்திடும்.
சொல்லுவ தெல்லாம்—மறைச்
 சொல்லினைப் போலப் பயனுளதாகும். மெய்
வல்லமை தோன்றும்—தெய்வ
 வாழ்க்கை யுற்றே இங்கு வாழ்ந்திடலாம்..."

எனப் பாரதியார் அவர்கள் பக்தியினால் விளையும் பண்புநலங்களையும் பயன்களையும் குறித்து விளக்கிப் பாடியிருத்தல், அனைவரும் அறிந்தின்புறற் பாலது.

நாம் தெய்வபக்தியிற் சிறந்து விளங்கி, நம் தேசப் பாதுகாப்புக்கும் வெற்றிக்கும் உரிய முறைகளிலெல்லாம் திறம்படச் செயலாற்றக் கடமையும் பொறுப்பும் உணர்ந்து முற்படுவோமாக! வாழிய பாரத மணித்திருநாடு!

—ந. ரா. முருகவேள்.

# சைவ சித்தாந்த மகா சமாஜம்,

## சென்னை.

### இளஞ் சைவப் புலவர் தேர்வு வினாக்கள்

மூன்று மணி நேரம்] இலக்கியம் [மதிப்பெண் நூறு

குறிப்பு: எல்லா வினாக்களுக்கும் மதிப்பெண் சமம்

1. ஆற்றுப்படையின் இலக்கணம் யாது? அது திருமுருகாற்றுப் படையில் எங்ஙனம் அமைந்துள்ளது?

2. திருமுருகாற்றுப்படை கூறும் முனிவரர் இயல்புகளைத் தொகுத்து வரைக.

3. கந்தர் கலிவெண்பா முருகனின் தசாங்கங்களாகக் கூறுவன யாவை?

4. குமரகுருபரர் முருகன்பால் வேண்டுவன யாவை?

5. கந்தர் அலங்காரத்தில் உலக மக்கட்கு உபதேசமாக வரும் எவையேனும் இரண்டு பாடல்களையோ, அவற்றின் பொருளையோ எழுதுக.

6. கந்தர் அலங்காரத்தில் நும் மனம் கவர்ந்த எவையேனும் இரண்டு செய்யுட்களை வரைக.

7. 'கந்தர்அனுபூதி' ஒரு சிறந்த அருள் நூல் என்பது பற்றிச்சிறு குறிப்பு வரைக.

8. அருணகிரிநாதர் முருகனை வரம் வேண்டும் முறையில் வரும் கந்தரனுபூதிச் செய்யுள் இரண்டினைச் சுட்டுக.

9. சம்பந்தரின் சிவிகை பரித்தார் திருக்குறளை எங்ஙனம் மறுத்தார்? தெளிவுறுத்துக.

10. சுந்தரர் முதலை வாயினின்று மதலையை மீட்ட அருள் நிகழ்ச்சியினைச் சிவப்பிரகாசர் எங்ஙனம் குறிப்பிடுகின்றார்?

11. திருவண்ணாமலைக் கார்த்திகை விளக்கீட்டின் சிறப்பினைச் சிவப்பிரகாசர் எங்ஙனம் புகழ்ந்தோதுகின்றார்.

12. "கருணைமலை எனும் பெயர் அன்மொழி ஒரீஇ வேற்றுமைத் தொகையைத் தழுவுற நின்று வளர்ந்திடும் சோண சைலன்" என்பதன் பொருளை விவரிக்க.

13. குமரகுருபரரின் நகைச் சுவைக்கு நீதிநெறி விளக்கத்தில்இருந்து எடுத்துக் காட்டுகள் தருக.

14. நீதிநெறி விளக்கத்தின் இலக்கியச் சுவைக்குச் சான்றுகள் சில காட்டுக.

15. பரிமேலழகர் பதசாரம் எழுதுதலில் வல்லவர் என்பதனை நிறுவுக.

16. பஞ்சக் கிலேசம், சுக்கிலத் தியானம், தாற்பரியம் என்னும் குறியிடுகளை விவரிக்க.

17. 'சுவையொளி யூறோசை' என்னும் குறளை எழுதி விளக்கம் வரைக.

18. "குடம்பையுட் புட்பறந் தற்றே" என்பதற்குப் பரிமேலழகர் கூறும் பொருள் யாது? பிறர் உரையினைஅவர் எங்ஙனம் மறுக்கின்றார்?

19. திருக்குறட் பாயிரத்தின் நான்கு அதிகாரங்களுக்கும் வைப்பு முறையினைப் புலப்படுத்துக.

20. நிரல்நிறை, ஏகதேச உருவகம், வேற்றுமை, எடுத்துக் காட்டுவமை என்னும் அணிகளுள் இரண்டிற்குரிய திருக்குறள்களை மட்டும் காட்டுக.

## இலக்கணம்

1. நூலுக்குப் பத்துவகைக் குற்றங்களும், பத்துவகை அழகுகளும் யாவை?

2. சார்பெழுத்துக்கள் 369 ஆதலை விவரிக்க.

3. 'ஈறுபோதல் இடையுகரம் இய்யாதல்' என்னும் சூத்திரத்தினை எழுதி, உதாரணங்கள் தருக.

4. செய்யுள் விகாரங்கள் எத்தனை வகைப்படும்? சிலவற்றிற்கு மேற்கோள் எழுதுக.

5. குறிப்புச் சொற்கள் எவையெவை? (அல்லது) "செந்தமிழ் நிலம் சேர் பன்னிரு நிலங்கள்" யாவை?

6. அறுவகை வினாக்களையும், எண்வகை விடைகளையும் இவையெனச் சுட்டுக.

7. பொருள் கோள்கள் எத்தனை? ஒன்றற்கு உதாரணம் தருக.

8. பெருங்காப்பிய இலக்கணங்கள் யாவை?

9. வைதருப்ப நெறிக்குரிய குணங்கள் என்னென்ன?

10. உவமை (அல்லது) உருவகத்தின் உட்பிரிவுகள் சிலவற்றைக் குறிப்பிட்டு, ஏதேனும் ஒன்றிற்கு உதாரணம் காட்டுக.

11. இலேசம், சமாகிதம், உதாத்தம், பரியாயம், பரிவ ருத்தனை என்னும் அணிகளுள் எவையேனும் மூன்றினைப் புலப்படுத்துக.

12. தண்டியலங்காரம் கூறும் சித்திரகவிகளின் பெயர் கள் (அல்லது) வழுக்களின் வகைகளைச் சுட்டுக.

13. அசைக்கு உறுப்பாவன எவையெவை?

14. நேரிசை, இன்னிசை, சிந்தியல் ஆகிய வெண்பா வகைகளைப் பற்றிச் சிறு குறிப்புக்கள் வரைக.

15. நேரிசை, நிலைமண்டிலம், இணைக்குறள், அடிமறி மண்டிலம்ஆகிய அகவற்பா வகைகளின் இலக்கணத்தைச் சுருக்கி வரைக.

16. "அருளல்ல தியாதெனிற் கொல்லாமை" என்னும் திருக்குறளின் தளையமைதிக்குரிய யாப்பிலக்கண விதி யினைக் குறிப்பிடுக.

17. 'விட்டிசைத் தல்லால் முதற்கண் தனிக்குறில் நேரசைஎன்று ஒட்டப்படாது' என்பதற்குரிய மேற்கோள் காட்டுக.

18. ஐந்திணைகளுள் ஏதேனும் ஒன்றற்குரிய கருப் பொருள்களை எழுதுக.

19 மறையோர் மன்றல்கள் எட்டு என்னென்ன? அவை எழுதிணைக்கும் உரிமையாமாறு எங்ஙனம்?

20. அருளியல் கிளத்தல், குறிப்பு வேறாக நெறிப்படக் கூறல், வரைவு கடாதல், காமம் மிக்க கழிபடர் கிளவி என் பனவற்றுள் எவையேனும் இரண்டிற்குக் குறிப்பு வரைக.

### சாத்திரம்

1. திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார் என்னும் பெயர்க் காரணங்களை விளக்குக.

2. பழக்கம் தவிரப் பழகுதல், கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தல், கள்ளரோடு இல்லம் உடையார் கலத்தல் என்பவற்றின் பொருளைத் தெளிவுறுத்துக.

3. "சார்புணர்ந்து சார்பு கெட" எனவரும் திருக் களிற்றுப் படியார் செய்யுளின் பொருளை விவரிக்க.

4. திருக்களிற்றுப் படியார் ஆசிரியர் நால்வர் பெரு மக்களிடத்திலும், ஏனைச் சிவனடியார்களிடத்திலும் மிக்க ஈடுபாடு உடையவர் என்பதனை நிறுவுக.

5 உயிரறிவின் சிறுமையை உமாபதிசிவம் எங்ஙனம் இகழ்ச்சிக் குறிப்புப்பட மொழிகின்றார்? (அல்லது) ஆணவ மலத்தின் இயல்பினைத் திருவருட்பயன் எவ்வாறு விளக்கு கின்றது?

6. ஊமன்கண், பாற்கலன் மேல் பூசை, பார்வை, நகுலம், பாலாழி மீன் என்னும் உவமைகளால் விளக்கப் படும் கருத்துக்கள் யாவை?

7. 'உண்மை விளக்கம்' கூறும் முப்பத்தாறு தத் துவங்களின் பெயர்களை மட்டும் எழுதுக.

8. 'பஞ்சாக்கர நடனம்' பற்றி உண்மை விளக்கம் கூறுவதனைச் சுருக்கி வரைக.

9. அத்துவித முத்தியின் இயல்பினை உமாபதி சிவம் எவ்வெவ்வுவமைகளால் விளக்குகின்றார்?

10.

"அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப்பெருவெழுத்தும் —நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி"

(அல்லது)

"ஒன்றிரண்டாய் நின்றொன்றில் ஓர்மையதாம் ஒன்றாக
நின்றிரண்டாம் என்னில்உயிர் நேராகும் — துன்றிருந் தார்த்
தாங்கியவாழ் தண்கடந்தைச் சம்பந்தா! யானாகி
ஓங்கியவா றெவ்வா றுரை"

என்பதன் பொருளைத் தெளிவுறுத்துக.

மூன்று மணி நேரம்] உரைநடை [மதிப்பெண் நூறு

குறிப்பு: எல்லா வினாக்களுக்கும் மதிப்பெண் சமம்

1. முருகனின் தொன்மை, பெருமை ஆகிய இயல்புகள் குறித்து ஒரு கட்டுரை வரைக.

2. திருநாவுக்கரசர் ஒரு "மெய்யுணர்வு பெற்ற மேலோர்' என்பதனைச் சான்றுகளுடன் விளக்குக.

3. பதினோராந் திருமுறையில் பட்டினத்தார் பாடியுள்ள 'நூல்களைக் குறிப்பிட்டு, அவற்றின் கவிச்சுவையினைப் புலப்படுத்துக.

4. தாயுமானவர் 'சமரச ஞானச் செல்வர்' எனினும், சைவ சித்தாந்த நெறியில் அழுந்திய பற்றுடையவர் என்பதனைச் சான்றுகள் காட்டி நிறுவுக.

5. பெரியபுராணத்திற் காரைக்கால் அம்மையார்வரலாற்றையேனும், திருவிளையாடற் புராணத்தில் விருத்தகுமார பாலரான படல வரலாற்றையேனும் சுருக்கி வரைக.

## மெய்கண்டார் தத்துவக் கழக

# வி ண் ண ப் ப ம்.

மெய்யன்புடையீர் !

சைவ சமயம் ஆழ்ந்த அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது. அந்த அனுபவத்தைப் பெறப் பல பிறவிகள், பல ஆண்டுகள் பாடுபடவேண்டும் எனவும், அந்நிலையைப் பெறும் வரை ஆன்மா இடைவிடாது முயல வேண்டும் எனவும் நூல்கள் கூறுகின்றன.

"பல்லூழி காலம் பயின்றரனை அர்ச்சித்தால்
நல்லறிவு சற்றே நகும்"

என்பது சான்றோர் வாக்கு எனவே சமய அனுபவத்திற் குரிய முயற்சியாகவோ அல்லது அம்முயற்சியில் ஈடு பட்டவர்கட்குச் செய்யும் உதவியாகவோ, நாம் செய்யும் காரியங்கள் தான் சிறந்த சமயப்பணியாகும்.

நம்பிக்கை மாத்திரத்தால் தெய்வத்தை வழிபட்டுச் சாமானிய அல்லல்கட்குப் பரிகாரம் தேடிக்கொள்வது பாமரமக்கள் சமய நிலையாகும். தத்துவ உண்மைகளை ஆராய்ந்தறிந்தும் பொதுவகையால் இறைவனைவழிபட்டும் ஆறுதலடைவது அறிஞர்கள் சமய நிலையாகும். சமய நூல் களில் விதித்த நெறி முறை பிறழாமல் தீக்கை முதலியன பெற்று முறையாகவே சிவ வழிபாடு செய்தல் உண்மை யான சமய நிலையாகும். ஏறக்குறையப் பத்து ஆண்டு களாகத் திருமுறை – சைவசித்தாந்தம் பற்றிய மாநாடு களும் சிவபூஜை செய்வோர் தொகையும் பெருகிவருவது மகிழ்ச்சிக்குரிய செயலாகும். திருக்கூட்டத்தார் ஆங் காங்குத் தோன்றித் தலவழிபாடுகள் செய்துவருகின்றனர். பொதுவாக உலகமும் சிறப்பாக நமது நாடும் தற்போது தெய்வத்திருவருளை நோக்கித் திரும்பியிருப்பது நல்ல அறி குறியாகும். நமது நாட்டின் தவப்புதல்வரும் தற்கால உலகத்தலைவர்கள் அனைவராலும் பாராட்டப் பெறுபவரு மான முதலமைச்சர் திரு. ஜவகர்லால் நேருவும் கூட ஆத்ம ஞானமும், விஞ்ஞானமும் இணைந்தாலல்லது உலகம் அமைதியுறாது என அடிக்கடி வலியுறுத்தி வருவதைச் செய்தித்தாள் படிக்கும் அன்பர்கள் அறிவர். விஞ்ஞான

வளர்ச்சியினால் லோகாயத மனப்பான்மை பெருகி வளம் பெற்ற நாடுகள் கூடப் போர்முரசு கொட்டி நிற்கின்றன. ஓரிருவர் மனச்சுழலில் உலகமக்களின் தலைவிதி ஊசலாடிக் கொண்டிருப்பதை அறிவுடையார் அறிவர். ஆதலால் எப்போதையும் விட இப்போது தெய்வத்திருவருள் உணர்வு மிகவும் இன்றியமையாதது.

ஆகவே சைவசமயிகளாகிய நாம்இப்போது நமதுகடமை யைச் சிந்தித்துணர்ந்து உறுதியோடு செயல்படவேண்டு மென்பது சொல்லாமலே இனிது விளங்கும். நமது சமயத் தெய்வ வழிபாடு வெறும் புறச் செயல்களோடு முடிந்து விடுவதில்லை. உள்ளுணர்வுதான் வழிபாட்டிற்கு இன்றிய மையாத நிலை. அந் நிலையை அடைவதற்கு புறச்செயல் கள் துணையாக நிற்கும். புறச்செயல்களின்றி அகஉணர்வு தோன்ற முடியாது. அகஉணர்வை நோக்காது செய்யும் புறச்செயல்களும் போலியாய்ப் பயனற்றன ஆகிவிடும். ஆலயவழிபாடு புறச்செயல்கட்கும் அகஉணர்விற்கும் பயன்படும் நிலையில் அமைக்கப் பெற்ற சிறந்த சாதன மாகும். மாநாடுகள் கூடிப்பேசுவதும் கேட்பதும் அடி யார் திருக்கூட்டம் தலயாத்திரை செய்வதும் சிவபூசகர் கள் ஒருங்குடிப் பூசித்து மகிழ்வதும் ஒருவாறு சமய மறு மலர்ச்சியைக் குறித்தாலும் ஆழ்ந்த அனுபவத்திற்குரிய சமயப்பயிற்சிகள் நாட்டில் அடியோடு வறண்டு போய் விட்டது என்பதை அன்பர்கள் சிந்திக்கவேண்டும்.

சமய அனுபவத்தைப் பெறுவதற்காகவும், அதனைப் பெற விரும்புவோர்க்கு உதவி செய்யவும் தோன்றியது துறவுநிலை. கல்விச்சாலை, மருத்துவநிலையம் போன்றவற் றைச் செம்மையாக நடத்துதல் துறவிக்குரிய முதற் கடமையல்ல. ஆன்ம அனுபவத்தைப் பெற்று அதனைப் பிறரும் பெற உதவுவதே துறவியின் முதற்கடமை. அந் நிலைக்குப் பங்கம்வராமல் சமயம் வாய்க்கும் போதெல்லாம் சமூகத்தொண்டிலும் ஈடுபடலாம். தமது வாழ் நாள் முழு வதையும் சமயப்பணிக்கே அர்ப்பணித்துக் கொண்ட நூற்றுக்கணக்கான இளைஞர்களைச் சேர்த்து அவர்கட்குச்

சமய அனுபவப் பயிற்சி கொடுத்து நூலறிவும் பெறும் படி செய்தால் அது உண்மையான சமயப் பணியாகும். ஞானவீறு பெற்ற இளைஞர்கள் தோன்றினாலன்றிச் சமயம் மீண்டும் சமூகத்தில் கலந்து பயன்பட முடியாது. விஞ்ஞான முதிர்ச்சியினால் உலகமே சுருங்கி மக்களின் தேவை அதிகரித்து வருகிறது. சமூகம் – பொருளாதாரம் – புள்ளி விவரம் – வாணிபம் முதலாகக் கல்லூரிப் பாடத்திட்டத்தின் கிளைகள் பல்கிவிட்டதாலும் பலமொழிகளைப் பயில வேண்டிய காரணத்தாலும், இலக்கியம், சமயம் சம்பந்தமாக ஆழ்ந்த படிப்பிற்கே வாய்ப்பில்லாத நிலை தோன்றி விட்டது. இலக்கியம் – இலக்கணம் – தத்துவம் – சமயம் இவற்றுக்காகத் தனிக்கல்லூரிகள் தோன்றினால் நலமாகும் மேல் நாடுகளில் ஒரு குடும்பத்திற்கு ஒரு பிள்ளை விதம் சமயப்பணிக்கு வழங்கப்படுவதாகச் சொல்லுகின்றனர். அத்தகைய நல்லுணர்வு நமது நாட்டிலும் உண்டானால் மிக எளிதில் சமயத்துறையில் நாடு முன்னேறி உலகத்திற்கே வழிகாட்டும் தகுதியைப்பெறும்.

## சைவ சித்தாந்த குருகுலம்.

குருகுலம் என்பது ஆன்ம அனுபவத்திற்குரிய பயிற்சி நிலையமே தவிர, உலகியல் அல்லது தொழிலியல் சம்பந்தமான கல்வி நிலையமல்ல. சமய நூல்களை ஓதுவதும் ஓதிய முறைப்படி பயில்வதுமே குருகுலத்தில் நிகழ்வன. முனிவர்களும் தத்துவ ஞானிகளும் குருகுலங்களை நடத்தி வந்தார்கள். தத்துவ உண்மைகளை அறியவும் ஞான அனுபவத்தைப் பெறவும் விரும்பித் தம்மைச் சரணடைந்தவர்களுக்கு உண்மை வழிகாட்டினார்கள். ஆதீனங்களும் அவ்வாறு தொடங்கப் பெற்றவையே தற்காலம் சமய அனுபவம் என்பதே ஏட்டுச் சுரைக்காய் என்ற அளவிற்கு அவநம்பிக்கை தோன்றும் நிலையில் இருக்கிறது இளந் தலைமுறையினர் சமய உணர்வின் அவசியத்தை உணரச் செய்து அவர்களை இந்நெறிக்குத் திருப்பாவிட்டால் சமயத் தலைவர்கள் தங்கள் கடமையை நிறைவேற்றத் தவறியவர் ஆவார்கள். ஓய்வு பெற்றவர்களும் முதியவர்களும் தான்

இஞ்ஞான்று சமயத்தைப் பற்றிச் சிந்திக்கிறார்களே தவிர இளைஞர்கள் சிந்திப்பதாகத் தெரியவில்லை. இராமாயணம் பாரதம் முதலிய கதாகாலக்ஷேபங்களும் கூட முதியவர்களுக்குத்தான் பொழுது போக்காக இருக்கின்றன. இளைஞர்கள் உள்ளத்தை அவை ஈர்க்கவில்லை. ஒன்றிலும் தோயாமல் அழகாகப் பேசி மகிழ்கின்ற அளவிற்குத் திருக்குறளை மட்டும் அனைவரும் போற்றுகிறார்கள்,

உலகில் வாழ்வாங்கு வாழ உதவுவதே சமயநெறி என்பதையும், வாழ்க்கை முன்னேற்றத்திற்குச் சமயநெறி தடையாயிருப்பதன்று என்பதையும், மாணவர்கள் உணரும்படி செய்ய வேண்டும். தவிரவும் விஞ்ஞான சாதனைகள் கடவுள் நம்பிக்கையில் சென்றுமுடிந்திருப்பதையும் விஞ்ஞானிகட்குப் புலனாகாத உண்மைகள் தத்துவ ஞானிகளால் விளக்கப் பெற்றுள்ளன என்பதையும் அவர்கள் மனங்கொள்ளும்படி தெரிவிக்க வேண்டும். நூற்றுக்கணக்கான இளைஞர்களைச் சேர்த்துக் குருகுலம் ஒன்றை அமைத்து உலகியல் கல்வியைப் பொதுவாகவும் சமயநூற் கல்வியைச்சிறப்பாகவும் அமைத்துச் சாதனங்களை வற்புறுத்தி ஞானச் செல்வர்களாக அவர்களை உருவாக்கவேண்டும். இதற்குக் குறைந்த பட்சம் ஐந்தாண்டுகளாகவும் அதிக பட்சம் பன்னிரண்டு ஆண்டுகளாகவும் காலவரையறை செய்யலாம். அந்தக் குருகுலம் சிறந்த தவநிலையமாக மிளிர வேண்டும். இந்தக் கொள்கை ஏற்றுக் கொள்ளப் பட்டால் அறிஞர்கள் பலரும் ஒருங்கு சேர்ந்து சாத்தியமான நடைமுறை விதிகளை அமைத்துக் கொள்ளலாம். இவ்வாறு குருகுலம் நிறுவி நடத்துவது நீண்டகாலச் சமய வளர்ச்சித் திட்டமாகும்.

ஓய்வு பெற்றுள்ள முதியவர்கள்— இளைஞர்கள் — இல்லறமேற்று அலுவலில் இருப்பவர்கள் எனச் சமூகம் மூன்று பிரிவாக இருப்பதால் அவர்கள் அனைவர்க்கும் சமயப் பிரசாரம் சென்று பரவும்படி திட்டம் வகுத்துக் கொள்வது நலம். ஒவ்வொரு மாவட்டத்திலும் அல்லது ஒவ்வொரு நகரத்திலும் ஒரு சமயப் பணிக்குழு இருத்தல் வேண்டும். சமய உண்மைகளையும் சான்றோர்வரலாறு

களையும்தெளிய உணர்ந்த மாதர்கள் வீடுதோறும் சென்று சமயப் பிரசாரம் செய்வதும் நல்ல பயனைத்தரும்.

தனிப்பட்ட முறையில் சமயப் பணிசெய்ய விரும்புபவர்கள் கீழ்க்கண்ட சாதன முறைகளை மேற்கொள்ளலாம்.

1 ஐந்தெழுத்தினை நூறுயிரம் அல்லது கோடி என வரம்பு செய்துகொண்டு எண்ணுதல்.

2 திருமுறைகள் அல்லது மூவர் தேவாரம் திருவாசகம் மட்டுமாவது நாடோறும் நியமமாகப் பாராயணம் செய்வது. முழுதும் பாராயணம் செய்து முடிந்தால் மீண்டும் தொடங்கவேண்டும்.

3. தோத்திரப் பாடல்களை மனப்பாடம் செய்து கொண்டு ஆலயத்தில் தங்கட்குப் பற்றுள்ள மூர்த்தியின் சந்நிதியில் தனித்துநின்று மானசீகமாகப் பொருளுணர்ச்சியோடுசொல்லுதல். மனம் ஒருமைப் பட்டு நிற்கும் வரையில் ஐந்தெழுத்தை எண்ணுதல். இந்தப் பயிற்சியே யோக நெறியாகும். இது மிகவும் சிறந்த சாதனமாகும்.

மெய்யன்பர்கள் சிந்தனையைத் தூண்டிவிடும் முறையில் இங்கே சில கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன. இவை தவிரவும் இன்னும் முதிர்ந்த அனுபவமுள்ளவர்கள் கூறும் கருத்தையும் கழகம் ஏற்றுக்கொள்ளும். இது சம்பந்தமாகக் கடிதப்போக்கு வரத்து வைத்துக்கொள்ள விரும்புவோர் கீழ்க்குறித்த முகவரிக்கு எழுதும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

சிவத்திரு, மாணிக்கவாசக ஞானதேசிக சுவாமிகள்,
சிவராஜயோக மடம்.
கா. மேலையூர் (அஞ்சல்)
(வழி) திருவெண்காடு.

பழநியில் நிகழ்ந்த சமாஜ ஆண்டு விழாவில்
ஆற்றிய சொற்பொழிவு.

# சைவ சாத்திர இலக்கியம்

திரு. மு. அருணாசலம், M. A.

முற்றொடர்ச்சி:

**ஔவை குறள்:—**

ஔவையார் அருளிய குறள் நெடுங்காலமாக எல்லோரும் பயில்கின்ற ஒரு சிறு நூல். 31 அதிகாரங்களையும் 310 குறட்பாக்களையும் உடையது. வீட்டுநெறிப்பால், திருநெறிப்பால், தன்பால் என்ற மூன்று பகுப்புக்களை உடையது.

திருவள்ளுவர் செய்த திருக்குறள், அறம், பொருள் இன்பம் என்ற மூன்று உறுதிப் பொருள்களையும் கூறுவதால் முப்பால் என்று வழங்கப் பெறுகிறது. வீடு என்ற பொருள் பற்றி அதில் தனியான பிரிவு இல்லை. ஔவையார் பாடிய குறளானது வீட்டை மட்டும் கூறுவதால் இது வீட்டு நெறிப்பால் எனப்பெயர் வழங்குகிறது.

திருக்குறளை யடுத்துக் குறட்பாக்களால் ஆனதனி நூல்கள் மிகவும் குறைவு. சைன சமய நூலாகிய அருங்கலச் செப்பு ஒன்று மட்டுமே குறட்பாக்களால் ஆனது. பிற்காலத்தில் உமாபதியார் செய்த திருவருட் பயன் மிக்க சிறப்பும் எளிமையும் உடைய சைவ சமய சாத்திரம் ஆயிற்று. அதன் பின் அனேக நூல்கள் குறட்பாவினாலேயே செய்யப் பெற்றன. உதாரணம்— ஔவை குறள், மறைஞான சம்பந்தர் செய்த முத்திநிலை, பரமோபதேசம் முதலான பல நூல்கள், பதி பசு பாசத்தொகை, நித்திய கன்ம நெறி, திருமெய்ஞ்ஞானப் பயன் போன்றவை. ஆனால் இவையாவும், ஔவை குறள் தவிர, 15-ஆம் நூற்றாண்டுக்குப் பின் வந்தவை,

**திருவருட் பயன்:—** ஒரு சம்பிரதாயத்தைத் தோற்றிவைத்திருக்கிறது. அதாவது சமயக் கருத்துக்களை மனத்தில் இருக்கத் துணை புரிவன, குறட்பாக்கள் என்பது. சுருக்கமாயும் பொருட் செறிவோடும் கருத்தை வெளியிட இவை உதவுவன. இக்கருத்திலிருந்து ஆராயின் இந்தவீட்டு நெறிப்பால் என்பது உமாபதியார் காலத்துக்குப் பின் வந்தது என்பது ஒப்புக் கொள்ளக் கூடியது.

ஆசாரியன் அறிவித்தாலொழிய, நூல்களால் உண்மை ஞானம் பிரகாசியாது என்று சிவப்பிரகாசம் 80–ஆம்பாடலை விளக்க மதுரைச் சிவப்பிரகாசர் ஔவைகுறளைக் கூறுகிறார்.

"அப்படியாக உண்மையை ஆசாரியன் முகாந்திரமாக அறிகிறதொழிய நூல்களினாலே அறியப்படாது என்பதற்குப்பிரமாணம் ஔவையார்:

நல்லன நூல்பல கற்பினும் காண்பரிதே
எல்லை யிலாத சிவம்.

எனவரும். மற்றோரிடத்தில் வீட்டு நெறிப்பால் என்று குறிப்பிட்டுப் பின்வரும் பாடலைக் கூறுகிறார்.

ஆணவம் பிண்டி கருமாயை தான் உமி
காமியம் மூக்கென்று காண்.

இது ஔவை குறளில் காணப்படவில்லை.

ஔவை குறளில் திருமுறைச் சொற்றொடர் ஆட்சிகள் இருத்தல் இயல்பு. தேவார, திருவாசகங்களால் அல்லவா சைவ வாழ்வு? மற்றும் இதனுள் மெய்கண்டசாத்திரத் தொடர்கள் காணப் படுகின்றன. சிறப்பாகக் கொடிக் கவி நான்காம் பாடல்.

அஞ்செழுத்தும், எட்டெழுத்தும், ஆறெழுத்தும்
நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும்—நெஞ்சழுத்திப்

பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி.

இதனோடு ஔவை குறள் 269 ஆம் பாடலைஒப்பிடுக.
"பேசா எழுத்துடன் பேசும் எழுத்துறில்
ஆசான் பரனந்தி யாம்."

இது கொடிக் கவியைத் தழுவியது என்பது வெளிப்படை. குறட்பா யாப்பில் சமய நூல்கள் எவ்வாறு பெருகின என்று கூறிய கருத்துடன் இந்த ஒற்றுமையையும் ஆராய்ந்தால், ஔவை குறள் உமாபதியாருக்குப் பின் வந்தது என்பது நன்கு தெளிவாகும்.

இதுகாறும் கூறியவற்றால், ஔவை குறள் ஒரு சித்தாந்த நூல் என்றும், அதன் காலம் உமாபதியார் காலமாகிய 1300க்கும், 1500க்கும் இடைப்பட்டது, (உத்தேசம் 1400) என்றும் விளங்கும்.

பண்டைக் காலத்தில் புலமை வாய்ந்த தமிழ்ப்பெருமாட்டியார் அனைவரையும் *அவ்வை என்றே வழங்குவது வழக்கம். (புனித வதியாரை மட்டும் ஊர்ப் பெயரால் காரைக்கால் அம்மை என்றும், தாம் நிகழ்த்திய அற்புதத்தால் 'பேயார்' என்றும், வழங்குகிறோம்.) அவ்வை—அவ்வம்மை. இவ்வாறு பலரறியச் சுட்டாகப் பெருமை பெற்றிருந்த அவ்வையார் பலர். ஒருவர் சங்க காலத்திருந்தார். ஒருவர் சுந்தரர் காலத்திலிருந்து விநாயகரகவல் செய்தார் என்பது வரலாறு. புகழேந்தி முதலாயினோர் காலத்திருந்தார் ஒருவர். ஆத்திச் சூடி முதலான நீதி நூல்களைச்செய்தவர் ஒருவர். நாம் கருதும் அவ்வையார் 1400ல் வாழ்ந்து இந்த வீட்டு நெறிப்பால் பாடினர்.

## சீகாழித் தத்துவநாதர் :—

சித்தாந்த சாத்திரங்கள் 14 இல் பதின்மூன்றாவதாக வுள்ளது உண்மை நெறி விளக்கம். இதை உமாபதி சிவம் செய்தார் என்ற கருத்து பழமையாக வழங்கி வருகிறது. சைவ சித்தாந்த நூலாராய்ச்சியும் பக்தியும் நிரம்பியவரான அனவரத விநாயகம் பிள்ளை யவர்கள், தக்க ஆதாரத்தின் மேல் இந்த நூல்செய்தவர்உமாபதியாரல்லர், இவர் சீகாழித் தத்துவ நாதர் என்று கூறினார்கள். அவர்கள் கருத்துச் சமாஜ முதல் பதிப்பில் வெளியாகியுள்ளது. ஆதாரமான செய்யுள் பின்வருவது:

> என்னும் அருள்நூல் எளிதின் அறிவாருக்கு
> உண்மை நெறிவிளக்கம் ஓதினான்—வண்மையினால்
> தன் காழித் தத்துவனார் தாளே புனைந்தருளும்
> நண்பாய தத்துவ நாதன்.

காழித்தத்துவனார், சீகாழிச் சிற்றம்பல நாடிகள். அவரு டைய மாணாக்கராகிய சீகாழித் தத்துவநாதர் இந்நூல் செய் தார் என்பது கருத்து.

சித்தாந்த சாத்திரமென்றே இந்நூலைப் பெரியோர் சொல்லி வந்தனர் என்றால், இது எவ்வளவு பெருமையும் நுட்பமும் பொருந்தியதாதல் வேண்டும்? இச்சிறு நூல்ஆறு அரிய திருப்பாடல்களையுடையது. ஆறும் தசகாரியம் கூறும். முதல் இரண்டும் தத்துவரூபம் தரிசனம். சுத்தியும், ஆன்ம ரூபம் தரிசனம் சுத்தியும் கூறுவன. பிந்திய நான்கும் முறையே சிவரூபம், தரிசனம், யோகம், போகம் கூறுவன. சித்தாந்த சாத்திரமாய்க் கொள்ளத்தக்க அருமைப் பாடு இச்சிறு நூலில் அமைந்துள்ளமையைக் கடைசி இரண்டு பாடல்களால் அறியலாம்.

## சிவயோகம் :—

> எப்பொருள் வந்துற்றிடினும் அப்பொருளைப் பார்த்திங்
> கெய்தும் உயிர் தனைக் கண்டிவ் வுயிர்க்கு மேலாம்

ஒப்பில் அருள் கண்டு சிவத் துண்மை கண்டு
உற்ற தெல்லாம் அதனாலே பற்றி நோக்கித்
தப்பினைச் செய்வதும் அதுவே நினைப்பும் அது தானே
தரும் உணர்வும் பொசிப்பும் அது தானே யாகும்
எப்பொருளும் அசைவில்லை யென அந்தப் பொருளோடு
இயைவதுவே சிவயோகம் எனும் இறைவன் மொழியே

**சிவபோகம் :—**

பாதகங்கள் செய்திடினும் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினும் நெறியல்லா நெறிபயிற்றி வரினும்
சாதி நெறி தப்பிடினும் தவறுகள் வந்திடினும்
தனக்கென ஓர் செயலற்றுத் தான் அதுவாய் நிற்கில்
நாதன் இவன் உடல் உயிராய் உண்டுறங்கி நடந்து
நானாபோ கங்களையும் தானாகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன்
பெருகுசிவ போக மெனப் பேசு நெறிஇதுவே.

இனி, சீகாழித் தத்துவநாதர் செய்த மற்றொரு நூல், அருணந்தியாருடைய இருபா இருபதின் உரை:

இருபா இருபஃதுரைஎழுதி னேன்முன்
ஒருவா விகற்பம் உணர்ந்தோன்—அருளுடம்பாம்
பண்புடைய சிற்றம் பலநாடி தாள்பணிவோன்
சண்பைநகர்த் தத்துவ நாதன்.

என்ற செய்யுள். தத்துவநாதர், சிற்றம்பல நாடிகள்மாணாக்க ரென்றும், சீகாழியின ரென்றும் இப்பாடல் தெரிவிக்கிறது. இது காண்டிகையுரை என்று ஏட்டில எழுதப்பட்டுள்ளது. சிற்றம்பல நாடிகள் மாணாக்கரான தத்துவப்பிரகாசர் தத்துவநாதர் அனைவரும் சமகாலத்தவர். ஆகலால், சிற்றம்பல நாடிகள் காலமாகிய 1325 — 1400 இவர்களுடைய காலமாகும்.

**தத்துவப் பிரகாசர் :—**

சந்தான ஆசாரியர் நால்வருக்குப் பிறகு ஒப்பற்ற சமயாசாரியர் பலர் விளங்கி இருக்கிறார்கள். அவர்களுள் ஈடற்ற சமயசாத்திரம் செய்தபெரியார் தத்துவப்பிரகாசர். இவர் சிற்றம்பல நாடிகளுடைய மாணாக்கருள் ஒருவர். இவர் தத்துவப் பிரகாசம் என்ற மிகச் சிறந்த விரிவான சாத்திர நூல் ஒன்றுசெய்திருக்கிறார். இச்சாத்திர நூல்337பாடல்கள் உடையது. இதன் இறுதியிலுள்ள வெண்பா

தன்னை அறிவிக்கும் நற்போதம் மாற்றுவிக்கும்
அன்னஅரு ளானந்தம்ஆற்றுவிக்கும் — மன்னியசீர்த்
தத்துவப்ர காசனியற் சண்பையார் கோனுரைத்த
தத்துவப்ர காசநூல் தான்.

என்பது. இதில் "சண்பையார் கோன்" என்றமையால், இவர் சண்பையாகிய சீர்காழியில் வாழ்ந்தார் என்று கரு தலாம். இவரைச் சிலர் சிவபுரம் தத்துவப் பிரகாசர் என்று சொல்லுகிறார்கள். அது பொருந்துவதன்று. இந்நூலின் பாயிரப்பகுதி 9 செய்யுட்களையுடையது. யாவும் மிகுந்த நய முடைய பாடல்கள். சந்தானகுரவர் வணக்கப்பாடல் பின் வருவது!

நந்தி சனற் குமரன்சத் தியஞானி யடிசேர்
நாதனும் பரஞ்சோதி மெய்கண்ட தேவன்
முந்து சண் பையர் தலைவன் கொற்றவன் குடியே
முதுபதியாம் உமாபதி இம் முறைமையிலே யாண்ட
செந்திருவின் பயன் சிற்றம் பலநாடி ஞான்மெய்ச்
சிவஞான வடிவான திருமேனி யடை வாய்ந்
தந்த இவர் சந்தான குரவரிவர் மலர்த்தாள்
தப்பாமலெம் மனத்தி லொப்பாக வைப்பாம்.

இங்கு சண்பையர் தலைவன் என்பதன் பொருளாக, "அவரது திருவடியார் நாற்பத் தொன்பதின்மரில் சிரேஷ்டராகிய சண்பையர் தலைவ நாயனார்" என்று பழமையான தத்துவப் பிரகாச உரை கூறுகிறது. இங்குக் குறிப்பிட்டவர் அருள்

நந்தி சிவாசாரியர். இது நாம் கவனிக்கத்தக்கது. சிற்றம்பல நாடிகளையும் சந்தானகுரவரோடு ஒருங்கு வைத்துச் சந்தான குரவர் என்றே தத்துவப் பிரகாசம் குறிப்பிடுவதாகும். இக் குறிப்பினுல் சிற்றம்பலநாடிகளுடைய பெருமை நன்குபுலனு கும். அடுத்து வரும் குரு வணக்கத்திலும் இவ்விதமே இவர் தம் குருவாகிய சிற்றம்பல நாடிகளுக்கு வணக்கம் செலுத்துகின்ருர்.

மன நினைவில் வாக்கிலனை வருக்கு மறிவரிய
வள்ளல் கள்ளத்தினுன் மறுகுமறி விலியேன்
தனை நினைவி லுட்கொண்டே அவனவளோ டதுவாம்
தன்மையில் நின்மல வடிவு தன்னை மன்னித்
தினையனைய வளவிலிரு வினைதுலையொப் பறிந்து
சீர்காழி மன்னு சிற்றம் பல நாடி ருனென்
முனைவினையு முடல்வினையும் வருவினையும் அறுத்து
முத்தி யளிப்பவன் மலர்த்தாள் சித்த முற வைப்பாம்

இதன் அவை யடக்கப் பாடல் சிவப்பிரகாசப் பாடலைத் தழு வியது. சிவப்பிரகாசத்திஞல் சிவம் பிரகாசிக்கும் என்ற குறிப்பு ஏற்படுவது போல, தத்துவப் பிரகாசம் என்ற நூலால் தத்துவம் பிரகாசிக்கும் என்று நாம் கருதலாம். தத்துவங்கட்கும், ஆன்மாவுக்கும், சிவனுக்கும் தத்துவம் என்ற பெயராதலால் தத்துவப் பிரகாசம் என்ற பெயர் என்று உரை கூறுகின்றது.

சித்தியாரைப் பின் பற்றி இவ்வாசிரியர் 9 பாடல்களில் அளவை இலக்கணம் கூறுகின்ருர். சைவர்களுக்குச் சித்தி யார் எப்படிமிக விரிந்த ஞானசாத்திரமோ அதுபோலஇது விரிந்த கிரியா சாத்திரம் என்று கூறினுல் உண்மை. சித்தி யாரில் குறிப்பாக மட்டும் உணர்த்தப்பட்ட அனேக விஷ யங்களை இந்நூல் தெளிவாக விளக்கிக் கூறுகின்றது.

மதுரைச் சிவப்பிரகாசர், ஞாஞவரண விளக்கத்தின் ஆசிரியர் போன்ருர், இந்த நூலில் நிரம்பப் பயிற்சி உடைய வர்கள்.

இதன் காலம் கி. பி. 1325. மிகப் பழமையான இதன் உரை சிறப்பான உரை. இந்த உரையினாலும், இதுவரையில் அறியப்படாத அநேக நூற்செய்யுட்களை நாம் அறிகிறோம்.

ஒரு குறிப்பு இங்குக்கூறத்தகுந்தது. சிற்றம்பல நாடிகள் வெண்பாவில் 14-ஆம் வெண்பா பின் வருவது.

என்னை மறைத்த இருள் எங்கேனும் போனதோ
நின்னருளிற் கெட்டதோ நின்றதோ—முன்னைத்
தவகுருவே தத்துவப்ர காசனே சண்பைச்
சிவகுருவே நாயேற்குச் செப்பு.

இப்பாடல் சிற்றம்பல நாடி என்று பெயர் கூறாமல் தத்துவப் பிரகாசனே என்று கூறுவதால் தத்துவப் பிரகாசரைப் போற்றும் செய்யுள் என நாம் கருத இடமுண்டாகிறது. யாப்பிலக்கணப்படி சிற்றம்பல நாடி என்ற தொடர் குறித்த இடத்தில் பொருந்தக் கூடியது. அஃது அங்கு சொல்லப் பெறாமையினால், இது சிற்றம்பல நாடியைக் குறிப்பிடவில்லை. தத்துவப் பிரகாசரையே குறிப்பிடுகிறது என்று எண்ண இடம் தருகிறது.

## காவை அம்பலநாதத் தம்பிரான்:—

மதுரைச் சிவப்பிரகாசர் என்ற பெரியார் காவை அம்பல நாதத் தம்பிரான் திருவடி மரபு என்று கூறுவதால் இவர் சில தலைமுறைகளேனும் முற்பட்டவர் எனக் கருதலாம்.

காவை அம்பல நாதத் தம்பிரான் என்ற பெயர் காவை அம்பலவாணத் தம்பிரான் என்றும் வழங்கும். இவர் செய்த நூல்களாக இப்போது தெரிந்தவை பின்வருவன:

(அ) பிராசாத அகவல்:— இது 159 வரிகள் உடைய அகவலாக அமைந்தது. 16 பிராசாத கலைகளையும் அவற்றுக்குரிய பெயர், மாத்திரை, வியாபகம், அளவு, வடிவு, ஒளி முதலியவற்றையும் விளக்கிக் கூறுகின்ற, சிறு நூல். இதற்

குப் பழமையாய்க் கிடைத்த ஓர் உரையோடு சோம சுந்தர தேசிகர் இதைச் சித்தாந்தத்தில் பல ஆண்டுகளுக்கு முன் அச்சிட்டிருக்கிறார். தமிழில் கிடைத்த பிராசாத சாத்திரங் கள் பலவற்றுள்ளும் இதுவே மிகப் பழமையானது. பிரா என்பது சிவஞானம்; சா—கதி; த—தருவது. அதாவது சிவ ஞானமாகிய முத்தி நிலை தருவது. தருமபுரம் மடத்தில் பதினாறு ஒடுக்கம் என்றொருகட்டு இருப்பதாகச் சொல் வார்கள். இதன்பொருளாவது, பிராசாதத்தில் கூறிய 16கலை களையும் முறையே ஒடுக்கி ஆண்டவனுடைய திருவடியில் ஆன்மாவைக் கொண்டு போய்ச் சேர்த்தல் என்பதாகும். அவ்வாறு ஒடுக்கத்தில் சிவயோகிகள் தங்கிய இடம் இது வாகும்.

அம்பல நாதத் தம்பிரானைக் குறித்து, பிராசாத அக வலின் கடைசியிலுள்ள பின் வரும் வரிகள் கருதத்தக்கன:

துய்யமுத் தமிழ் சேர் வையைமா நதியுங்
குன்ற மெறிந்த வெற்றி வேலன்
போற்றி வானவர் தொழ விற்றினி திருக்கும்
மன்றவஞ் சோலைக் குன்றநன் னாடும்
பூவலர் வாவிக் காவையம் பதியும்
வளந்திகழ் திசையுடன் விளங்க வந்தோன்
அம்புவி புகழ்திரு அம்பல நாதன்
சிவனரு ளாவருள் திருமந் திரத்தைத்
தவநெறி யொழுகுந் தக்கோர்க் குரைத்தனன்.

இவற்றால் பின்வரும் செய்திகள் வெளியாகின்றன. இவரது ஊர் காவனூர் என்கின்ற காவை; திருப்பரங்குன்றத்தைச் சார்ந்தது. கார்காத்த வேளாளர்;வள்ளல். முக்கூடற் பள்ளு என்ற நூல் இவரை "காவையம் பலவாணன் பலகிளையும் தழைக்கவே கூறுவாய் குயிலே" என்று பாடுகிறது. இவர் ஒரு தம்பிரானப் இருந்து ஒரு ஞான பரம்பரையைத் தோற்று வித்தார் என்று அவதாரிகைக் குறிப்பால் அறி கிறோம்.

(ஆ) உருப சொருப அகவல் :— இது அகவற்பாவில் 104 வரிகளையுடைய சிறு நூல். சமீபத்தில் தான் தருமபுரத்தார் பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது. சமாஜம் மதுரைச் சிவப்பிரகாசர் உரையை அச்சிட்ட காலத்தில் இந்நூல் இருப்பதாகத் தெரியவில்லை. இது பதி பசு பாசம் மூன்றுக்கும் உருவம், சொரூபம், சுபாவம், விசேடம், வியாத்தி, வியாபகம், குணம், வன்னம், தரிசனம், சுத்தி என்ற பத்தையும் கூறும்.

> மேவுருவ சொருபசுபா வம்விசே டம்வியாத்தி
> தாவுவியா பகங்குணமே வன்னந்தான் — ஓவுந்
> தெரிசனஞ் சுத்தியெனச் சேர்பவை பத்தும்
> அருள் பசுபா சங்கட்கும் ஆம்.

என்ற தத்துவப் பிரகாச மேற் கோள் வெண்பாக் காண்க. இவற்றை ஞானாவரண விளக்க வுரையிலும், ஒருமேற்கோள் பாடல் பின்வருமாறு கூறுகிறது :

> உருவம் பின் சொருவ மற்றுமுள சுபாவம் விசேடம்
> விரிதரு வியாத்தியோடு வியாபகங் குணமே வன்னம்
> தெரிசனஞ் சுத்தி யென்னுந் தெசவித காரியங்கள்
> வருவதுஞ் சொல்வர் பத்தும் வருமுறை வேறுஞ்சொல்வர்.

இந்தப் பத்துத் தன்மைகளும் தசக்கிரமம் எனப்படும். இந்த தசக்கிரமம் கூறுகின்ற பிறநூல்கள் தத்துவப் பிரகாசம், குருஞான சம்பந்தர் பாடிய திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல் என்பன ஆகும். தசக்கிரமங்களின் பெயர் ஒவ்வொன்றிலும் சற்றே வேறுபட்டிருக்கும்.

பிராசாத அகவலும், உரூப சொரூப அகவலும் மதுரைச் சிவப்பிரகாசர் உரையில் குறிப்பிடப்பட்டுள்ளன.

1. இவற்றைக் கூறுகின்ற கட்டளையொன்று பல ஆண்டுகளுக்கு முன் சித்தாந்தம் இதழ்களில் வெளியிடப்பட்டுள்ளது. 2. தருமபுர ஆதீன நூல்களில் காவை அம்பலவாணத் தம்பிரான் வெள்ளியம் பலவாணத் தம்பிரானுடைய சீடர் என்று சொல்லப்பட்டுள்ளது. வெள்ளியம் பல

வாணர் குமரகுருபரருடைய மாணுக்கர் என்பார்கள். காலம் 17-ஆம் நூற்றுண்டின் இறுதி. ஆனுல் காவை அம்பலநாதத் தம்பிரானுடைய காலம் 14-ஆம் நூற்றுண்டின் முற்பகுதி. இரண்டுக்குமிடையே 350 ஆண்டுகள் கழிந்திருக்கின்றன. ஆகவே அக்கருத்து பொருந்துவதன்று.

> களங்கமில் பதிபசு பாசக் கருத்தினே
> இவ்வகை தெரிய இயம்பிய தேசிகன்
> காரணி பொழில்சூழ் காவைஅம் பலவன்
> ஏரணி சித்திஉயிர்க் கெய்துதல் எடுத்தே

என்பது இவ்வகவலின் இறுதிவரிகள்.

(இ) சிவப் பிரகாசக் கருத்துக் கலிவெண்பா :—

இவர் சிவப் பிரகாசத்தின் நூற் கருத்தை ஒரு கலி வெண்பாவால் தொகுத்துரைத்தார். பின் வரும் வரிகளேக் காண்க :—

> வந்தளித்த சம்பந்த மாமுனிவன் — எந்தைபதஞ்
> சென்னியின்மேல் வைத்துச் சிவப்பிரகாசக் கருத்தை
> அன்ன வயற்காவை அம்பலவன் — நன்னயத்தாற்
> சொன்னுன் எழுபிறப்பும் தொல்லே வினே யுந்திர
> மன்னு கமத்தை மதித்து.

இப்பாடல் நம் ஆசிரியரைக் குறித்து ஒரு சிறப்பான செய்தியையும் தெரிவிக்கிறது. இவர் சம்பந்த முனிவருடைய மாணுக்கர். இச்சம்பந்தரே சிற்றம்பல நாடிகளின் மாணுக்கருள் ஒருவரான சம்பந்த பண்டாரம் என்பவர்.

இத்தம்பிரான் மரபையும் இங்கு நினேவு படுத்தலாம். சிற்றம்பல நாடி மாணுக்கர் சம்பந்த மாமுனிவர் (பண்டாரம்). இவர் மாணுக்கர் காவைக் கமலநாதர்; இவர் மாணுக்கர் மதுரை ஞானப் பிரகாசர்; இவர் மாணுக்கரே சிவப்பிரகாசப் பேருரை செய்த மதுரைச் சிவப்பிரகாசர். இவருடைய காலம் கி. பி. 1375—1400.

தத்துவ விளக்கம் :—

51 கட்டளைக் கலித்துறை கொண்ட சிறு நூல். சைவ சித்தாந்த மரபின் படி உள்ள தத்துவங்களை விளக்கிக் கூறுவது. ஆசிரியர் இதனில் பாடல்தோறும் காழி வேந் தரைக் குறிப்பிடுகின்றார். இது காரணமாக ஆராய்ச்சி யாளர் இந்நூலைக் கண்ணுடைய வள்ளல் செய்தார் என்று கூறுகின்றனர். ஆனால்திருநெறி விளக்கம் ஒன்பதாம் பாடல் "தத்துவ விளக்கம் நவின்ற நாவன்...சம்பந்த சரணாலயன்" என்று கூறுகின்றது! இந்த சம்பந்த சரணாலயர் சிற்றம்பல நாடிகளின் மாணாக்கரான காழிச்சம்பந்த முனிவரின்மாணாக் கர்; தம் குருவையே இங்குக் காழிவேந்தர் என்றார். இவரி டம் அருள் பெற்று வாழ்ந்த ஒரு மாணாக்கர் திரு நெறி விளக்கம் பாடினார்.

தத்துவ விளக்கம் மிகச் சிறப்பான ஓர் ஆதார நூலாக இருந்திருக்கிறது; மதுரைச் சிவப்பிரகாசர் பிறசாத் திர உரையாளர்கள், வெள்ளியம்பலவாணத் தம்பிரான், சிவப்பிரகாசப் பெருந்திரட்டுத் தொகுத்தவர் போன்றார் தத்துவ விளக்கப் பாடல்களை எடுத்து ஆளுகின்றார்கள். இந்நூல் சென்ற ஆண்டு சித்தாந்தம் இதழில் வெளி வந் தது.

இவர் திருவருட்பயன் உதாரணம் கலித்துறை என்ற பெயரால் ஒரு நூல் செய்தார் என்று தருமபுரத்தார் வெளி யிட்டிருக்கிறார்கள். இந் நூல் திருவருட் பயன் பாடல் ஒவ் வொன்றுக்கும் ஒரு விளக்கக் கலித்துறையைக் கூறுகிறது. பாடலின் போக்கைக் கொண்டு இது செய்தவர் மதுரைச் சிவப்பிரகாசர் போற்றிக் கூறும் அம்பல நாதர் அல்லர்;பின் வந்தவேறொருவர் என்று துணிந்து கூறலாம்.

காழிக் கண்ணுடைய வள்ளல் :—

இவர் சீகாழியில் வாழ்ந்த ஞானி. தாமும் பெரிய ஞான பரம்பரையில் தோன்றி எண்ணற்ற சீடருக்கு ஆசிரியராயி

ருந்து சிவஞானம் பெருக்கியவர். இவரைப் பற்றிய கதைகள் பல. அன்றியும் இவருக்கு முன்னும் பின்னும் சீகாழியில் பல வேறு வள்ளல்கள் தோன்றி வளர்ந்தனர். இத்தனையும் இங்கு ஆராய்ந்து முடிவு சொல்ல இடமில்லை. எனினும் இதுகாறும் செய்துள்ள ஆராய்ச்சிக்குட்பட்ட நூல்களாலும், நாம் ஆராயும் காலத்து எல்லைக்குள் இருந்த பெரியார் என்ற அளவாலும், அறிய வந்த சில உண்மைகளைக் கூறல் பொருந்தும். இவர் திருவதிகையிலிருந்து சீர்காழி வந்து சம்பந்த முனிவர் திருவடிக்குத் தொண்டு பூண்டு சம்பந்த சரணாலயனார் என்ற பெயரோடு வாழ்ந்தார் என்று தெரிகிறது. அந்த நிலையில் இவர் தத்துவ விளக்கம்பாடினார். இவர் மாணாக்கரொருவர் திருநெறி விளக்கம் பாடினார். பின்னர் சம்பந்த சரணாலயர் கண்ணுடைய வள்ளல் ஆனார். திருநெறி விளக்கப் பாடலாலும், தத்துவ விளக்கம் கண்ணுடைய வள்ளல் செய்தாரென வழங்குவதாலும் இதை அறிகிறோம். இவர் ஏற்படுத்திய மடம் குகமடம் என்றும், இவர்களுக்குரியது குக பத்ததி என்றும் அறிகிறோம். பல ஆசிரியர்கள் செய்து வந்ததாகக் கூறிய பல நூல்களை இவர்செய்ததாக எழுதி இருக்கிறார்கள். இது பொருந்துவதன்று. இவர் செய்தனவாக இப்போது தெரிந்து கிடைக்கின்ற நூல்கள் பின்வருவன: ஒழிவி லொடுக்கம், பஞ்சாக்கர மாலை, ஞான சாரம், நியதிப் பயன், மாயாப பிரலாபம், பஞ்சமலக் கழற்றி என்பன.

## ஒழிவி லொடுக்கம்

கண்ணுடைய வள்ளல் பாடிய வெண்பா நூல் இது. 253 வெண்பாக்களையுடையது. இந்த நூலில் ஆசிரியர், ஆன்மா கெடாது அதனது போதம் கெடுதலாகிய நெறியினது சுகாதீத நிலையைக் கூறியமையால் இந்த நூல் ஒழிவில் ஒடுக்கம் எனப் பெயர் பெற்றது. இது திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் உரை செய்த பெருமையும், சென்ற நூற்றாண்டில் வடலூர் இராமலிங்க சுவாமிகள் அச்சில் பதிப்பித்த பெருமையும் உடையது.

இந்த நூலில் உள்ள 151 ஆம் பாடலில் சிவானந்த மாலை வரிகள் (276) அப்படியே எடுத்து எழுதப்பட்டிருக்கின்றன என்று முன்னமே குறிப்பிட்டோம். இதன் மூலம் இவர் சிவானந்த மாலை ஆசிரியரான சம்பந்த முனிவரின் மாணாக்கரென்பது தெளிவாகின்றது.

இந்த நூல் பொதுவில் உபதேசம், சத்திநிபாதத்துடக் தமர் ஒழிவு, யோகக்கழற்றி, கிரியைக்கழற்றி, சரியைக் கழற்றி, விரத்திவிளக்கம், துறவு, அவத்தைத்தன்மை, வாதனை மாண்டார்தன்மை, நிலை இயல்பு என்றுபத்துப் பிரிவுகளை உடையது. இதன் இடையில் உள்ள பல பாடல்களிலும் இறுதியில் உள்ள பாடல்களிலும் இந்த நூலைச் செய்தவர் தம்முடைய குருவை "வள்ளல் குருராயன் வாது வென்ற சம்பந்தன்" என்பது முதலான சொற்களால் வழிபடுகிறார் என்பது விளங்குகிறது. இந்தச் சம்பந்தர் சிற்றம்பல நாடிகளின் மாணாக்கரான சம்பந்த பண்டாரம் அல்லது சம்பந்த மாமுனிவர். சிற்றம்பல நாடிகள் காலம் கி. பி. 1325 என்று மேலே நாம் வரையறுத்தமையால், கண்ணுடைய வள்ளல் காலம் கி. பி. 1350 — 1375.

ஓர் உண்மை இங்கு அறியத்தக்கது. முந்தைய ஞானசிரியர் அனைவரையும் போற்றுகின்ற மதுரைச் சிவப்பிரகாசர், மிக்க புகழோடு விளங்கிய இவ்வாசிரியருடைய புகழ் பெற்ற இந்த நூலை எடுத்துக் காட்டவில்லை. ஆகலின், இந்நூலை அவர் சுத்தாத்துவித சித்தாந்த நூல் எனக் கருதினர் இல்லை என நாம் முடிவு செய்யலாம்.

## நியதிப் பயன்

வடமொழியில் உள்ள குக பத்ததியின் சாரமாக இவ்வாசிரியர் காழிச் சம்பந்தரை முன்னிலைப் படுத்திப் பாடியது. வினவும் விடையுமாக 103 கட்டளைக் கலித்துறைகள் உடையது. நித்திய கருமவிதிகள் ஒவ்வொன்றையும் எடுத்துச் சொல்லி, ஏன் இவ்வாறு செய்ய வேண்டும் என்று முதல் 29 பாடல்களில் வினவுகிறார். பின்பு 74 பாடல்களில்

அவற்றுக்கு விடை கூறுகின்றார். தம்குருவைக் காழிக் கண்ணுடைய சம்பந்தனே என விளித்துக் கேட்கின்றார்.

வியதிகளுக்கு இந் நூல் வினவும் விடையுமாக அமைந்ததுபோல, பூசைக் கிரியைகளுக்கு வினவும் விடையுமாக அமைந்த நூல் குருமொழி வினு விடை என்பது. பிற்காலத்துச் சத மணிக் கோவையும் இந்த முறையில் அமைந்த நூலே யாகும்.

## மாயாப் பிரலாபம்

இது 84 வெண்பாக்களை உடைய சிறு நூல். மாயையானவள் போதனைப் பறிகொடுத்துப் புலம்புவதாக உள்ளது. இதன் சிறப்புப் பாயிரப் பாடலால் கண்ணுடைத் திருஞான சம்பந்தருடைய தொண்டர் இதைச் செய்தார் என்றும், ஆசிரியர் அதிகைக்கு அதிபர், காழிமூதூரர், குகையடத்தலைவர் என்றும் அறிகிறோம்.

## பஞ்சாக் கரமாலை

கண்ணுடைய வள்ளல் செய்த தெனவழங்குவது, 60 வெண்பாக்களையுடையது. எளிமையான நல்ல நடை: இதன் பழமையான உரையோடு சோமசுந்தர தேசிகர் இதைச் சித்தாந்தம் இதழில் வெளியிட்டார். திருவைந்தெழுத்து சம்பந்தமான தூல பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், சீவன் முத்தர் ஞான பூசைக்கிரமம் ஆகியவற்றை உணர்த்தும் நல்ல நூல். இறுதியில் உரையாசிரியர் கூற்றாக வரும் வெண்பாவினால், இதன் ஆசிரியர் கண்ணுடைய வள்ளல் எனக் கருதக்கூடும்.

## ஞான சாரம்

118 கட்டளைக் கலித்துறைகளுடைய நூல். வேதாந்தமாகும். "சைவ அத்துவிதம் தன்னைத் தமிழினாற் கூறலுற்றும்" என்று ஆசிரியர் கூறுகின்றார். சைவசமய சாத்திரக் கருத்துக்களின் சுருக்கமான சிறு நூல்.

### பஞ்சமலக் கழற்றி

காழி வள்ளலை முன்னிலைப் படுத்தி பஞ்சமலங்களும் விட்டு நீங்க வேண்டும் என்று கூறுகிற ஐந்து வெண்பாக்களையுடைய சிறு நூல்.

**சதமணிக் கோவை :—**

ஞான பூஜாவிதிப் பாடலின் முன்னே காட்டப் பட்ட நூல்களில் இதுவும் ஒன்று. இப்பாடலை, மதுரைச் சிவப் பிரகாசர் எடுத்தாளுவதால், இதுவும் பண்டைய நூல் என்றே கொள்ள வேண்டும். பல முறை அச்சான நூல். வினாவடிவில் அமைந்த 106 வெண்பாக்களையும் உரை நடையான வினா விடையாகச் சில வரிகளையும் உடையது.

இது மிகவும் சுவையுடைய சிறு நூல். மாணிக்க வாசகருடைய திருச்சாழலில் ஒருவர் முன்னிரு வரிகளில் கேள்வி கேட்கவும் பின்னிருவரிகளில் ஏற்ற விடையை ஊமைப் பெண் கூறுமாறும் அமைந்திருப்பது போலவே, இதுவும் வினாவிடையாயுள்ளது. கேட்கப் படும் பொருளே வெண்பா.பொருள்கள் புராணகதை, சரியை,கிரியை, தத்துவங்கள். பாசம், அவத்தை ஆன்மதரிசனம் குருதரிசனம் போன்றவை. விடை மிகவும் சுருக்கமாய், ஒன்றிரண்டு சொற்களால் அமைந்தது. எடுத்துக் காட்டாக இங்கு இரண்டு பாடல்களைக் குறிப்பிடுவோம்.

ஒன்று : புராணக்கதை ஈசன் எங்கும் உளன் என்றால் காசி முதலான பதிகளைக் குறிப்பிட்டுப் புகழ்வது என் என்று கேட்கிறார்.

ஈசன் குறைவறவே எவ்விடத்தும் நிற்பனெனில்
காசி முதலாகும் பதிநதியாய் — பேசியதிங்கு
ஏதோ புராணங்கள் எல்லாம் இறையவனே
ஈதென்று நாயேற்கு இயம்பு.

விடை: "பசுவின் முலையிலே பால் பலித்தாற் போலே" மற்றொன்று; அத்துவிதமுத்திநிலையைவிளக்கவினாவும்வினா.

(தொடரும்)

# வாழியர் நெடிதே கோவைகிழார்!

நமது சமாஜத்தோடு 1936 முதல் மிக நெருங்கிய தொடர்பு உடையவரும், "சித்தாந்தம்" இதழின் ஆசிரியராக 10 ஆண்டுகள் இருந்து அதனை வளர்த்துச் செம்மைப் படுத்தியவரும், கோவையில் இரண்டு முறை சமாஜ மாநாடுகளைச் சிறப்புற நடத்திக் கொடுத்தவரும், மயிலம் சிவகாசி என்னும் இடங்களில் நிகழ்ந்த சமாஜ மாநாடுகளில் தலைமை தாங்கிச் சிறப்பித்தவரும், யாழ்ப்பாணத்திலும் கொழும்பிலும் நிகழ்ந்த சமாஜ விழாக்களிற் கலந்து கொண்டு சொற்பெருக் காற்றி மகிழ்வித்தவரும், சமாஜப் பொன்விழா மலர் வெளி வரப் பணிபுரிந்தவரும், சமாஜ வளர்ச்சியிலும் சமய வளர்ச்சி யிலும் பெரிதும் ஈடுபாடு மிக்கவரும், இன்னும் எத்துணையோ பல பெருஞ் சிறப்புக்களையுடையவரும் ஆகிய நம் பேரன்பிற் கும் பெருமதிப்பிற்கும் உரிய பெரியார் "சித்தாந்தப் புரவலர்" "செந்தமிழ்ப் புரவலர்" "திருப்பேரூர்ச் சாந்தலிங்க அடி களார் தமிழ்க் கல்லூரித் தலைவர்" "பல நூல் ஆசிரியர்" "பன்மொழிச் செல்வர்" "பல்கலைக் குரிசில்" "இராவ் பகதூர்" கோவை கிழார் திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், B.A., B.L., அவர்களுக்கு, அண்மையில் 74-ஆம் ஆண்டு நிறைவு எய்தி, 75-ஆம் அகவை தொடங்கியிருக்கும் நற்செய்தி கேட்டு, எல்லையில்லா மகிழ்ச்சி எய்துகின்றோம்.

"ஒன்றுபத் தடுக்கிய கோடிகடை இரீஇய
பெருமைத் தாகநின் ஆயுள் தானே!"

என்று அவ்வன்புருவப் பெருந்தகையை மட்டற்ற மகிழ்ச்சி யுடன் மனமார வாழ்த்துகின்றோம். அவர்கள் நீடினிது வாழ்ந்து, இன்னும் எத்துணையோ பல மன்பதைப் பணிகளை ஆற்றும் வண்ணம் எல்லாம் வல்ல நம் சிவபிரான் திருவடி மலர்களை, மனமொழி மெய்களாற் பணிந்து அன்பு மீக்கூர வாழ்த்துகின்றோம்.

நல்ல பெருந்தகையார் நம்சமா ஜச்சான்றோர்
பல்கலை நூல்கள் பயின்றளித்தோர்—எல்லையில்சீர்க்
கோவைகிழார் இன்பம் குலவநன்றே வாழ்க! என
ஆவல்மிக வாழ்த்துகின்றேம் யாம்.

—ந. ரா. முருகவேள்.

மாதாந்தர வழிபாடு: 11-11-62 ஞாயிறன்று சென்னை இலிங்கிச் செட்டித் தெருவிலுள்ள ஸ்ரீ மல்லிகேசுவரர் கோயிலில் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சமாஜச் செயலாளர் திரு. ச. சிவகுமாரன் M. A.. அவர்கள் அனைவர்க்கும் வரவேற்புரையும் நன்றியுரையும் வழங்கினார்கள். திரு. புலவர் ந. ரா. முருகவேள், M. A., M. O. L. திருவாசகமணி திரு. K. M. பாலசுப்பிரமணியம் B. A., B. L. ஆகியவர்கள் அரிய இனிய சொற்பொழிவாற்றினார்கள். ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்களின் முடிவுரைக்குப் பின்னர்த் திருமுறை இசையுடன் விழா இனிது நிறைவெய்தியது.

நினைவுநாள் விழா :— ஈழ நாட்டில் உதித்த ஒப்புயர்வற்ற பெரியார்களில் ஒருவரான சர்பொன் இராமநாதன் K. C. C. M. G. Kt அவர்களின் நினைவு நாள் (26-11-62) அன்று கொண்டாடப் பெற்றது. இலங்கையிற் புகழ்பெற்று விளங்கிய தலைவர்களில், சர்பொன் இராமநாதன் அவர்கள் தலைசிறந்தவர். ஆங்கிலம் தமிழ் சமஸ்கிருதம் சிங்களம் பாலி கிரேக்கம் லத்தீனம் ஆகிய பல மொழிகளில் தேர்ச்சி பெற்றவர். இணையற்ற வழக்கறிஞர். பகவத்கீதை விவிலியம் ஆகிய நூற்களுக்கு உரை எழுதியவர். இராமநாதன் கல்லூரி, பரமேசுவரா கல்லூரி ஆகியவைகளைத் தோற்றுவித்தவர். தம் தந்தையார் அமைத்த கொழும்பு நகர்ப் பொன்னம்பல வாணேசுரர் கோவிலைச் சிற்பவேலைப்பாடுகள் அமையும்படி செய்தவர். சிங்களவர்களும் மனமுவந்து போற்றிப் பாராட்டி மகிழும்படி விளங்கிய மாபெருந் தலைவர் அப்பெருந்தகை!

நமது சமாஜத்தின் ஆண்டுவிழாக்கள் சிதம்பரத்திலும் (1905) சென்னையிலும் (1922,1925) நிகழ்ந்த பொழுது தலைமை தாங்கிச் சிறப்பித்தவர். இலங்கை முன்னாள் அமைச்சர் திரு. சு. நடேசபிள்ளை B. A. B. L. அவர்களின் மாமனார். இத்தகைய தமிழ்ச் சைவப் பெருந்தகையின் நினைவு நம்மிடையே என்றும் நிலைபெற்று நின்று, நமக்கு வழிகாட்டும் வான் பொருளாக வயங்குமாறு, எல்லாம் வல்ல சிவபிரான் திருவடிகளை இறைஞ்சுகின்றோம்.

---

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan. Edited by A. Somasundaram Chettiar, M.A., and Published by S. Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva-Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.